
திருச்சி என்றாலே தெரியும்
மலைக்கோட்டை
சாரதாஸ் என்றாலே
அழகு துணிக் கோட்டை
சாரதா'ஸ்
சுபமுகூர்த்த பட்டுப்புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்
தன்பில்டிங்,
827, மவுண்ட் ரோடு,
சென்னை - 2.
போன் - 28521177
45, என்.எஸ்.பி. ரோடு,
திருச்சி - 2.
போன் - 2702077

✉ போப் மறைவுக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக தலையங்கம் எழுதி, கூடவே அரசு மூன்று நாட்கள் துக்கம் அறிவித்தது பற்றி, 'நறுக்கென' ஒரு குட்டு குட்டியது, ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய வாதம்.

ஈரோடு, ரேவதிப்ரியன்

✉ காதல் சிறகுகளில் அர்ச்சனா தான் இளப்பியது சற்றும் எதிர்பாராதது.

சென்னை - 39, சிம்மவாஹினி



# ஜில்லுனு ஜோரா!

✉ த்ரிஷாவின் 'தில்லான' பதில்கள், 'ஜில்லான' பதில்களாகவும் அமைந்து ஜோராக சந்தோஷப்படுத்தியது!

மதுரை - 16, பி. ராஜசேகரன்

✉ 'இப்படிக்கு சைக்கிள்', 'வதை' இரண்டு கவிதைகளும் மனத்தில் தங்கிவிட்டன.

சிவகங்கை, தேவபாரதி

✉ அமரர் கல்கியின் 'மனோன்மணி' சினிமா விமர்சனம், படிப்பதற்குச் சுவையாக இருந்தது. கல்கி எழுத்தின் வலிமை சிலிர்க்க வைக்கிறது!

மொரட்டுப்பாளையம், சு.நா. இராஜேஸ்வரன்

✉ சம்மர், மாம்பழம், விழா, பாரதி சென்னு குறிப்பிட்டது எல்லாம் சரி! அனாவசியமாய் சந்திரமுகியை வம்புக்கு இழுத்து விட்டதோடு, சந்திரமுகியை டிக் அடிக்காம நோஸ்கட் விட்ட சுமியை எதிர்த்து, அகில உலக ரஜினி ரசிகர் மன்றம், வழக்கு பதிவு செய்யப்போகிறது!

பள்ளிப்பாளையம், ரஞ்சனிப்ரியன்

✉ 'நீ தைர்யலட்சுமிடா செல்லம்..' என்று கூறி சூப்பர் ஸ்டார் ரஜினி தடாலடியாக சிங்கத்தின் காலில் சூப்பர் பல்டி அடித்து விழுவதாக அமைந்த கற்பனை எங்கேயோ நிஜமாகவே நடந்த சம்பவம் போல் உள்ளதே...!

நெய்வேலி-7, எஸ். கண்ணன்

மதச்சார்பின்மை என்ற விளக்கம் தரக்கூடும் என்று நீங்களே ஒரு காரணம் கற்பித்து தலையங்கம் எழுதுவது என்ன தர்மமோ? கேட்டுப் பெறுவது உரிய கௌரவம் ஆகாது. அன்னை தெரஸாவுக்கு இப்படி ஒரு அரசு முறைத் துக்கம் அறிவித்து இருந்தாலும், கல்கி அதையும் கேள்வி கேட்காது என்பது என்ன நிச்சயம்?

மதுரை - 14, சி. இரமேசு

## வாரம் ஒரு வாசகர்!

வெள்ளிவிழா கொண்டாடும் பாரதிய ஜனதா கட்சியைப் பற்றி பிரமுகர்களின் கருத்துக்கள் நச்! நல்லகண்ணு சொன்ன 'நமது நாட்டில் காலம் காலமாக மதக் கலவரங்கள் நடந்து வந்தாலும் அதை அரசியல் ஆதாயமாக மாற்றியது பா.ஜ.க.தான்' என்பது மறுக்க முடியாத உண்மை.



திருவாரூர், டி. முருகேசன்

போப் ஆண்டவர் இறந்ததற்கு மூன்று நாட்கள் துக்கம் அனுஷ்டிக்க உத்தரவிட்ட மத்திய அரசின் செயலைக் குறை கூறியுள்ளீர்கள். 'போப் ஆண்டவர்' வாழும் வாடிகன் நகரம் ஒரு தனி அரசாக உலகிலுள்ள அனைத்து நாடுகளாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, போப் ஆண்டவர் அதன் Head of State ஆகக் குறிப்பிடப் படுகிறார். இத்தாலி நாட்டிலுள்ள (ரோமில்) நம் பாரதத் தூதுவர் வாடிகனுக்கும் தூதுவராக நியமிக்கப்படுகிறார். ஆகவே ஒரு நாட்டுத் தலைவர் மறைந்தால், அவருக்குத் தர வேண்டிய மரியாதைகளைத்தான் பாரத அரசு இவ்விஷயத்திலும் செய்துள்ளது.

ஸ்ரீரங்கம், வை. கிருஷ்ணமூர்த்தி

ஒரு கலீஜான படத்துக்கு ஃபுல் பேஜை வேஸ்ட் செஞ்சுக்கினியே... நியாயமா கீதா?"

பொன்மலை, ஆர். பிரகாஷ்


# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



# –கொந்தளிக்கிறார் கமல்

**ஒரு பக்கம் டிஜிட்டல் படப்பிடிப்பு பற்றிய ஒட்டுமொத்த தயக்கங்களையும் உடைத்து நொறுக்கிக்கொண்டு, மறுபக்கம் விறுவிறுப்பான திரைக்கதை எழுதுவதில் புதிய திசைவழிகளை காட்டியபடி விரையும் கலைஞானியை மும்பை எக்ஸ்பிரஸ் வெற்றிக்குப் பிறகு சந்தித்தோம்.**

**கடைக்கோடி ரசிகனையும் சிரிக்க வைக்கிற இத்தனை ஜனரஞ்சக நகைச்சுவை எழுத்தாளர் கமலை இத்தனை நாள் ஏன் ஒளித்து வைத்திருந்தீர்கள்?**

"அதற்குக் காரணம் நமக்கே தெரியாது. கமல் ஒரு குரங்குத்தனமான ஆள்! இன்னும் கொஞ்சம் கௌரவமாக சொல்வதென்றால் பன்றி மாதிரி! தனது பலம் அதற்கே தெரியாது. பன்றி அடித்ததென்றால் ஒரு ஜீப்பே கவிழ்ந்து போய்விடும். அந்த மாதிரி என் பலம் எனக்கே தெரியாமல் இருந்திருக்கலாம். என் கூடப் பழகினவங்க எல்லாம் நல்ல புல்லினம், மானினம், குதிரையினம் என்று இருந்தது ஒரு காரணமாக இருந்திருக்கலாம்."

**கமல் ஒரு நாத்திகர். மும்பை எக்ஸ்பிரஸ் அவிநாசி ஒரு ஆத்திகர். இந்த இரண்டு பிம்பங்களில் எது நிஜமான கமல்?**

"ஆப்ரகாம் கோவூர் அவார்டு என்று கேரளாவில் எனக்கொரு விருது கொடுத்தார்கள். இங்கே பெரியாரை தமிழர்கள் எப்படி மதிக்கிறார்களோ, அப்படி அங்கே ஆப்ரகாம் கோவூர். எனக்கு அந்த விருது கிடைத்தபோது பெருமையோடு சொன்னேன்... 'எத்தனையோ விருதுகள் கிடைத்திருக்கின்றன. ஆனால் இந்த விருது எனக்கு மிக முக்கியமாகப்படுகிறது. காரணம், இது எனது திறமைக்காக கொடுக்கப்பட்ட விருது அல்ல. நான் வாழ்ந்த முறைக்காக' சிறந்த பகுத்தறிவு வாதி என்று தலைப்பிட்டுக் கொடுத்தார்கள்.

அந்த விழாவில் சொன்னதைத்தான் நான் இந்தக் கேள்விக்கும் மறுத்தளிப்பாகச் சொல்ல விரும்புகிறேன். நாத்திகம், நாத்திகர் என்கிற வார்த்தைகளையே ஏற்றுக் கொள்ளாதீர்கள். அது ஆத்திக சூழ்ச்சி. இறை மறுப்பு என்று வேண்டுமானால் சொல்லலாம். பல மறுப்புகளில் அதுவும் ஒன்று. நாத்திகம் என்பது ஆஸ்திகம் என்பதன் எதிர்ச்சொல். இதை ஆஸ்தியாகவும், அதை நாஸ்தியாகவும் நிர்ணயிப்பது ஒரு தலைப்பட்சமான நோக்கு. அந்த வார்த்தைப் பிரயோகமே ஒருவிதமான இடத்தைக் குறிக்கிறது. கல்கியில் கூட அக்ரஹாரம் என்ற வார்த்தையைச் சொன்னதற்காக கோபித்துக் கொண்டார்கள். அக்ரஹாரம் தலையாய இடமாகவும், அங்கே ஒரு மிருகத்தின் தலை இருந்ததாகவும் கருதப்பட்டதால்தான் பெரியார் போன்றவர்கள் அங்கே சாடினார்கள். தனிப்பட்ட முறையில் பிராமணர்கள் பால் எந்த வித காழ்ப்பும் அவருக்கு இல்லை என்பதற்கு



# "முதுகில்

ராஜாஜியும் அவரும் நண்பர்களாக இருந்ததே சாட்சி! யுக்திப்படி பார்க்கும்போது துரோணர் காலில் அம்பை வைத்துவிட்டு அடிக்க வேண்டிய உரிமை அர்ஜுனருக்கு இருந்ததாகக் கதை சொன்னால் நம்புகிறோமே! போர் யுக்தி வேறு! பர்சனல் உணர்ச்சிகள் வேறு.”

**நாத்திகப் பிரச்சாரம் இனி தேவையில்லை என்கிறீர்களா?**

“நான் இப்போது நாத்திகம் பேச வேண்டிய அவசியம் குறைந்திருக்கிறது என்கிறேன். பகுத்தறிவுக் காலம் மக்களுக்கு தன்னால் வந்திருக்கிறது. பகுத்தறிவுப் பாதையை பெரியார் மட்டும்தான் கொண்டுவர வேண்டும் என்பதில்லை. சுபிட்சமே கொண்டு வரும்.”

**ஆசியாவின் மிகப்பெரிய குடிசைப் பகுதியான தாராவியின் வாழ்கைதான் மும்பை எக்ஸ்பிரஸுக்கான இன்ஸ்பிரேஷனா?**

“தாராவிதான் முன்பு மிகப்பெரிய ஸ்லம்மாக இருந்தது. அதை உடனே மாற்ற வேண்டும் என்று அழித்தார்கள். மேஜை மீது கிடக்கிற தண்ணீரைத் தள்ளிவிட்டால் மற்றொரு பக்கம் போய்விடும். அப்படித்தான் மும்பை மொத்தமுமே இப்போது தாராவியாகி விட்டது. திருநெல்வேலிக் காரர்களும், மராட்டிக் காரர்களும் இருக்கும் இடம் என்று சொல்



# குத்தாதீங்க!”

விக் கொண்டிருந்தார்கள் இல்லையா! அது இப்போது இல்லை. எல்லா ஜாதிகளும் எல்லா இனங்களும் வாழும் உலகத்தின் மிகப்பெரிய குப்பம் மும்பை. இங்கே ஒருவரை ஒருவர் தீண்டியே ஆக வேண்டும். தீண்டத்தகாதவர் என்று யாருமில்லை. அகண்ட சமத்துவபுரம் அது. அங்கே இருக்கும் வறுமையும் ஏழ்மையும் எனக்குப் பிடிக்கவில்லை. அதிலிருந்த அழுக்கும் சாக்கடையும் எனக்குப் பிடிக்கவில்லை. இத்தனைக்கும் நடுவில் தாமரை இலைத் தண்ணீர் போல அங்கேயுள்ள வாழ்க்கையில் ஒரு நம்பிக்கையிருக்கிறதே.. அது எனக்கு மிகவும் ஆச்சர்யமாக இருந்தது. அது எனக்கும் வராதா என்ற ஏக்கத்தின் பிரதிபலிப்புதான் இந்த அவிநாசி பாத்திரம்."



**ஆபத்துகள் நிறைந்த சாகஸங்களைத் தேடிப் போய் செய்கிறீர்கள்! உங்களுக்கு உயிர் பயம் என்பதே கிடையாதா?**

"இது வெளியில் இருப்பவர்களின் கருத்து. பண்டரிபாய் அம்மாவுக்கு கை போய்விட்டது. சினிமாவால் போகவில்லை. அது விபத்து. அது யாருக்கு வேண்டுமானாலும் நடக்கும். இது என்னுடைய கவனக்குறைவோ அல்லது எனக்கு பயிற்றுவிக்கும் எனது வீரசாகஸக் கலைஞரின் கவனக்குறைவோ அல்ல. விபத்து. இந்தக் கை ஒடிந்ததும் அப்படித்தான். நான் செய்கிற எல்லா ஸ்டண்டுக்கும், கமல்ஹாசன் உயிர்மீது என்னைவிட வேறு யாருக்கும் ஆசை இருக்க முடியாது என்பதுதான் என்னுடைய கருத்து. தேவையில்லாத ரிஸ்க் எடுக்கமாட்டேன். ஆனால் ஆபத்தின் விளிம்புவரை சென்று எட்டிப் பார்க்கும் ஒரு முனைப்பு எனக்கு எப்போதுமே உண்டு."

**வர்த்தகக் கோட்பாடுகளிலிருந்து தமிழ் சினிமாவின் திரைக்கதையை மீட்டெடுக்கும் தீவிரவாதியாக கமல் உருமாறிவிட்டாரோ என்று எண்ணத் தோன்றுகிறதே..?**

"மீட்டெடுப்பெல்லாம் கிடையாது. சர்வைவல் ஆஃப் த ஃபிட்டெஸ்ட்! அதில் கொஞ்சம் தீவிரம் இருக்கத்தான் செய்யும். கொஞ்சம் ரத்தம் கசியத்தான் செய்யும். நோ பெய்ன்! நோ கெய்ன் என்று நினைப்பவன் நான். புத்தர் சொன்னதாக எடுத்துக் கொண்டாலும் சரி. ஆர்நால்டு ஸ்வாஸ்நேகர் சொன்னதாக எடுத்துக் கொண்டாலும் சரி. வலி இல்லாமல் வாழ்க்கை இல்லை. இது ஒரு தொழிலாக, வியாபாரமாக இருக்கும்போது, புரட்சிகளில் ஈடுபடும் தியாகம் என்னிடம் இல்லை. ஆனால் இங்கே மிக நியாயமாக நிகழ வேண்டியது நிகழாமல், சந்தையில் கிடைக்க வேண்டிய நியாயம் தமிழ் சினிமாவில் கிடைக்காமல் இருப்பதைத்தான் நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன்."

**'நான் தனி ஆள் இல்லை' என்று சமீபத்தில் சொல்லியிருந்தீர்கள். இப்படிச் சொல்ல வேண்டிய கட்டாயம் உங்களுக்கு ஏற்பட்டுவிட்டதா?**

"அது எல்லோருக்குமே தெரிய வேண்டும் என்று நினைக்கிறேன். ஒரு தொழில் துறை இது. 'புலி வருது! புலி வருது! எல்லோரும் என் மீது ஏறிப் படுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னதல்ல அது. யாரிடமும் போய் உதவி செய்யுங்கள் என்று நான் கேட்கவுமில்லை. நியாயம் ஜெயிக்கும் என்ற நம்பிக்கையிருந்தது. ஒவ்வொரு கூட்டத்திலும் பெரியவர்கள் சிலர் இருக்கத்தான் செய்வார்கள். உண்மை எது? நியாயம் எது என்று தெரியாமல் உணர்ச்சி வேகத்தில் துள்ளிக் குதிக்கிறவர்களுக்கு அவர்கள் யாராவது சொல்லிவிடுவார்கள் என்ற நம்பிக்கையிருந்தது எனக்கு."

**"இந்தத் தகராறை நான் ஆரம்பித்து வைக்கவில்லை!"**

**கமல் நியாயமானவர், அவரது வாதம் நேர்மையாக இருக்கும் என்று**

**தமிழ் தலைப்பு விஷயத்தில் பிடிவாதம் காட்டுகிறவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லையே?**

"நேர்மை ஜெயிக்குமா என்று தெரியாது. ஆனால் நியாயம் கண்டிப்பாக உலகத்துக்கு புரியும். நேர்மை புரிய கொஞ்சம் நேரம் பிடிக்கும். 'என்னையா, சும்மா போறவனை அடிச்சுக்கிட்டு இருக்கான்' என்ற உண்மை ஊருக்கே புரியும். நேர்மையானவனா இல்லையா என்பதை அவன் வாழ்ந்துதான் காட்ட வேண்டும். அது ஒரு பெரிய கொடுமை. நான் தப்பும் பண்ணவில்லை. யாரோடும் வாதமும் பண்ணவில்லை. கவனித்திருப்பீர்கள். வாதம் செய்கிறவர்களும், சாடுகிறவர்களும் சமரசமாகும்போது மன்னிப்புக் கோருகிற கடமைக்கு ஆளாகிவிடுகிறார்கள். இப்போது சமரசமாகும்போது நான் நன்றி சொன்னால்கூட அவர்கள் கோபித்துக் கொள்ள மாட்டார்கள். ஏனென்றால் இந்த தகராறை நான் ஆரம்பித்து வைக்கவில்லை."

**இத்தனை காலம் கழித்து கமல் ஆடியோ நிறுவனம் தொடங்க வேண்டிய அவசியம் என்ன?**

"இதுவும் ரௌத்ரம் பழகிய விஷயம் தான். நியாயமாக கிடைக்க வேண்டியதைக் கொடுக்காமல், 'இவ்வளவுதான், மியூசிக் செத்துப் போச்சு' என்று ஒரு கணக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அது இல்லை என்பதை நிரூபிக்கத்தான் இந்த முயற்சி. நான் ஆடியோ தொடங்கியதில் வியாபாரம் கூட கிடையாது. ஒரு ஆராய்ச்சிமணி. ஒரு லட்சத்து எழுபத்தைந்தாயிரம் கேசட்டுகளை எந்தக் கடைக்கும் அனுப்பாமல் என்னால் விற்க முடிந்தது. நீங்கள் ஐம்பதாயிரம்தான் விற்கும் என்றீர்கள். வியாபாரத்தில் விட்டுக் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. விடாமல் எல்லாவற்றையும் பிடித்துக் வைத்துக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? விவசாயிக்கு விதை வாங்க காசு கொடுக்க வேண்டாமா? இப்படிச் செய்தால் விவசாயம் நின்று போகாதா? நீ இல்லை என்றால் வேறு விவசாயி என்பீர்கள். அவனையும் இப்படித்தானே ஏமாற்றப் போகிறீர்கள். எல்லோருக்கும் வர வேண்டிய நியாயமான கோபம் இது. 'மாற்றம் வேண்டும், மாற்றம் வேண்டும் என்று கேட்காதே... அந்த மாற்றமாக நீயே மாறிவிடு' என்பார் காந்தி. நான் காந்தியின் மிகப்பெரிய ரசிகன். இதில் இன்னொரு பெரிய கொடுமை என்னவென்றால், காந்தியைப் பற்றி தப்பாக படமெடுக்கிறார் என்றார்கள். அப்போதும் இதே அரசியல்வாதிகள்தான் 'ஹேராம் படத்தை நிறுத்தச் சொன்னார்கள்.

## "நான் சிரிக்கும் பக்குவத்தை இழந்துவிட்டேன்!"



நீங்கள் சொல்லுங்கள்... காந்தியை எதிர்த்து, அவரது உருவத்தை சிதைக்கும் படமா ஹேராம்? ஆனால் அதைச் சொன்னது காங்கிரஸ்காரர்கள். அந்தச் செய்தியை முதலில் பத்திரிகையில் போட்டு கமலை தட்டிக் கொடுத்த புண்ணியவான்கள் தமிழர்கள்.எனக்கு கைதட்டா விட்டாலும் பரவாயில்லை. இப்படி எதிர்பாராத நேரத்தில் அதுவும் பின்புறத்திலிருந்து பொறடியில் தட்டாமல் இருக்கலாம். இல்லையா? முதுகில் குத்துவதற்கும் இதற்கும் என்ன வித்தியாசம்? அழும் கோழைத்தனம் எனக்கு இல்லை. ஆனால் நான் சிரிக்கிற பக்குவத்தை மட்டும் இழந்துவிட்டேன் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

கலைஞன் என்பவன் சாந்தமான மனநிலையில் இருந்துகொண்டு செயல்பட வேண்டும். வேலை செய்கிற உச்சகட்டத்தில் என்னைத் தொந்தரவு பண்ணிவிட்டு, ஓய்வு பெறும்போது நீங்கள் பாராட்டுவது எனக்கு வேண்டாம்."

பேட்டி : ஆர்.சி. ஜெயந்தன்

அட்டை, படங்கள் : ஸ்ரீஹரி

முழுமையான பேட்டிக்கு... kalki@kalkionline.com



• ரப்பரும் கையுமாய்...!

● பி. நடேசன்,
கொள்ளிடம்.

? ஏப்ரல் 14ல் வெளியான சந்திரமுகி, மும்பை எக்ஸ்பிரஸ், சச்சின் - இவற்றை வரிசைப் படுத்துங்களேன்...

! பேய் ஓட்டுபவரை பைக் ஓட்டுபவர் முந்திவிட்டாராமே! (பிட்சில் ஓடுபவர்...? ஸாரி! ரொம்ப ஸ்லோ... ரன்ரேட் கம்மி)



• ஓட்டுறது நைனா...!




● ப.கா. மணிமொழியன், நாகமலை.

? டீ.வியில் காமெடி நிகழ்ச்சிகளைப் பார்ப்பதை விட்டுவிட்டு, அரசியல் செய்திகளையும் அரசியல் பிரமுகர்களின் பேட்டிகளையும் ரசிக்கத் தொடங்கிவிட்டேன்... தராசு எப்படி...?

! நமது அரசியல், காமெடி டிராக்காக மாறி வருவதை ரசிக்கும்போதே, அடிநாதமாக ஒரு சமுதாய சோகம் இழையோடுவதை உணர்கிறேன்.

● வே. பாலா, திண்டுக்கல்.

? சினிமாவில் ஆபாசம், வன்முறைக் காட்சிகள் இடம் பெறுவதற்கு மத்திய தணிக்கைக் குழுவில் அதிக அளவில் தி.மு.க உறுப்பினர்கள் இருப்பதே காரணம் என்று ஜெ. சொல்வது...?

! தணிக்கைக் குழுவில் சமீபத்தில்தாங்க மாற்றங்கள் ஏற்பட்டிருக்கு. சினிமாவில் ஆபாசம் - வன்முறை பலகாலமாக இருந்து வருதுங்க. மேலும், ஒரு படத்தைப் பார்க்கும் சென்ஸார் உறுப்பினர்கள் எல்லோரும் ஒரே கட்சியைச் சேர்ந்தவங்களா இருக்க மாட்டாங்க.

● ஷோபனாதாசன்,
நாட்டரசன்கோட்டை.

? குஜராத்தில் மோடி ஆட்சியைக் கலைத்துவிட்டு ஜனாதிபதி ஆட்சியை அமல்படுத்த வேண்டும் என்கிறாரே லல்லு பிரசாத் யாதவ்?

! பீஹாரில் ராப்ரி ஆட்சி நடக்காததால், எல்லா மாநிலங்களிலும் ஜனநாயகத்தை ரப்பர் வைத்து அழித்துவிட முடியுமா என்ன...! மக்கள் தீர்ப்பை மாற்ற, மற்றொரு மக்கள் தீர்ப்புக்குத்தான் காத்திருக்க வேண்டும். பா.ஜ.க தலைமை, மோடியைப் பதவி இறக்கி 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்று கூறாது.

● ரேவதிப்ரியன், ஈரோடு.

? பாகிஸ்தானின் கிரிக்கெட் விளாசல்கள் எப்படி...?

! எடுத்த எடுப்பிலேயே விளாசவில்லை என்பதுதான் சிறப்பு. தளராத தன்னம்பிக்கையுடன் தொடக்க ஆட்டக்காரர்கள் நின்று ஆடி, விக்கெட்களுக்கு இடையில் ஓடி, சிறுகச் சேர்த்து, பலமான அஸ்திவாரம் அமைக்க, அதன் பிறகுதான் விளாசல்... நம்மவங்க சரணாகதி!

● உமரி பொ. கணேசன்,
மும்பை - 37.

? கிருஷ்ணா நதி நீருக்காக உச்சநீதிமன்றத்தை தமிழக அரசு அணுக இருப்பது சரியா...?

! அதெல்லாம் சரிதான். ஆனால், நதி

# நீங்கள் கேட்டவை-தராசு



நீர் பகிர்வு விஷயத்தில், உச்சநீதிமன்ற ஆணைகளையே மதிப்பதில்லை என்கிற நிலை உருவாகியிருப்பதுதான் ரொம்பத் தப்பு!

# பேரவைத் தலைவர் சாம்பாரில் உப்பாமே..?



• கரையுமா கரிக்குமா!

● மகா,
திருப்பூர் - 3.

? ரயில்வே நடத்திய ஒரு தேர்வில், 'ரஜினியின் புதுப்படத்தின் பெயர் என்ன?' என்று கேட்கப்பட்டதாமே... இதெல்லாமா பொது அறிவுக் கேள்வி...?

! உலக நடப்பு, நாட்டு நடப்பு என்பது சினிமாவையும் உள்ளடக்கியதுதான். நாலும் தெரிந்துதான் இருக்க வேண்டும்.

● என். சண்முகம்,
திருவண்ணாமலை.

? 'பேரவைத் தலைவர் என்பவர் சாம்பாரில் கரைத்த உப்பைப்போல் இருக்க வேண்டும்' என்று சபாநாயகர் கூறியுள்ளது பற்றி...?

! நயமான உவமைதான். பருப்பு, காய் அனைத்திலும் பதமாக, சமமாக உப்பு ஊடுருவி நின்றால், சாம்பார் ரொம்ப ருசிக்கும். ஆனால் கரையாமல் அடம் பிடிக்கும் கல் உப்பு, சில சமயம் கரித்துக் கொட்டுவதும் உண்டு.

● பி. கற்பகம், சென்னை - 73.

? 'முதலில் உங்க சின்ன ஐயாவை (அன்புமணி) தமிழரின் பாரம்பரியமிக்க வேட்டியைக்

● எஸ்.மெ.ஷாஜஹான்,
திருநெல்வேலி - 5.

? மெதுவாகப் பந்து வீசியதற்காக கேப்டன் கங்குலிக்கு அபராதம் விதிக்கப்பட்டுள்ளதாமே?

! மேல் முறையீடும் பலன் தரவில்லை. பேசாம அவர் வி.ஆர்.எஸ் வாங்கிக்கறது அவருக்கும் நல்லது; ஆட்டத்துக்கும் நல்லது.







• ஒரு கண்ணுக்கு வெண்ணெய்...

• ஆடை பாதி ஆங்கிலம் மீதி!

கட்டச் சொல்லுங்கள்' என்று சட்டமன்றத்தில் ஜெ. கூறியது குறித்து...?

! 'உடையில் என்ன இருக்கிறது?' என்று சமாதானம் சொல்கிறவர்கள், 'சினிமா டைட்டிலில் என்ன இருக்கிறது?' என்று சமாதானமடைவதாகத் தெரியவில்லையே! அதுதான் இடிக்கிறது!

● இரா. சக்கரபாணி,
மதுரை - 7.

? நிதிப் பற்றாக்குறையைக் காரணம் காட்டி அரசு ஊழியர்களுக்குக் கருணைத்தொகை, மத்திய அரசுக்கு இணையாகப் பஞ்சப்படி ஆகியவற்றை அளிக்க மறுத்த தமிழக அரசு, சட்டமன்ற உறுப்பினர்கள் - அமைச்சர்கள் சம்பளத்தை மட்டும் முன்தேதியிட்டு உயர்த்தி வழங்கியது நியாயமா?

! வோட்டுக் கேட்டு வருவாங்க இல்ல... அப்ப ஞாபகமா கேளுங்க, இந்தக் கேள்வியை!

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
ப.கா. மணிமொழியன்,
7/1286, சுப்ரமணிய சிவா தெரு,
நாகமலை, மதுரை - 625 019

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
மல்லிகா இராமலிங்கம்,
47/24, பேட்டை வீதி,
புதுப்பேட்டை (S.O)
கடலூர் மாவட்டம்
607 108.

● கே. சேதுராமன்,
திருக்குறுங்குடி.

? உச்சநீதிமன்ற உத்தரவுக்குப் பிறகும் டான்ஸி நிலத்தை அரசிடம் திருப்பி ஒப்படைக்காமல், ஜெ. மௌனம் சாதிக்கிறாரே?

! கர்நாடக தனிநீதிமன்றம் உத்தரவிட்டும் அதன் முன் ஆஜராகாமல் ஜெ. டபாய்க்கிறாரே! 'நீதிக்கு முன் அனைவரும் சமம்' என்று இதே ஜெயலலிதா வேறு சந்தர்ப்பத்தில் கூறியிருக்கிறாரே...!

● எஸ். அன்புமணி,
ஈரோடு

? கேரள காங்கிரஸின் அடிப்படை உறுப்பினர் பதவியிலிருந்து முன்னாள் முதல்வர் கருணாகரனின் மகன் முரளிதரனை ஆறு ஆண்டுகளுக்கு நீக்கியது துணிச்சலான நடவடிக்கைதானே?

! என்ன துணிச்சல்...? உட்கட்சி ஜனநாயகத்தைக் கடைப்பிடிக்கிற துணிச்சல் இல்லாமல், ஜால்ரா அரசியல் நடத்துவது துணிச்சலில் சேர்த்தியா!

● மல்லிகா இராமலிங்கம்,
புதுப்பேட்டை★

? ஒரு பத்திரிகை, விற்பனையில் நெ.1 என்கிறது; மற்றொன்று, வாசகர் எண்ணிக்கையில் நெ.1 என்கிறது, எதை நம்புவது?

! ஏ.பி.ஸி, பிரதிகள் விற்பனைக் கணக்கையும் என்.ஆர்.எஸ் ஒவ்வொரு பிரதியும் எத்தனை பேரால் வாசிக்கப்படுகிறது என்ற கூட்டு எண்ணிக்கையையும் தருகின்றன. முன்னது பத்திரிகை அலுவலகத்தில் நடக்கும் 'ஆடிட்'; பின்னது வாசகரிடையே நடத்தும் 'சர்வே.'

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? எஸ்.ஜே. சூர்யா தான் நடிக்கும் பெஸ்ட் ஃப்ரெண்ட் படத்துக்கு 'அ...ஆ' என்று இரண்டே எழுத்தில் தலைப்பு வைத்துள்ளாரே...?

! Best Friend, அன்பே ஆருயிரே என்பதன் சுருக்கமாயிருக்குமோ? ○

# மங்கையர் மலர்

**மே 2005-கணினி இரட்டைச் சிறப்பிதழ்**

- கம்ப்யூட்டரில் கோலம் போடலாம்!
- கைகொடுக்கும் கால்சென்டர்!

## லேட்டஸ்ட் கம்ப்யூட்டர் தகவல்கள்

- 'ஜிம்' இல்லாமல் ஜம்'
- விட்டாச்சு லீவு!
- விடுமுறை தின்பண்டங்கள்!



ரேவதி சங்கரனின்

## வீட்டு வைத்தியக் குறிப்புகள்!

**இன்னும் ஏராளமான கோடை கால டிப்ஸ்**




## கொள்ளை போன குபேரப் பட்டணங்கள்!

**மா**நகராட்சி வார்டு தேர்தல் என்பது ஜனநாயகத்தின் அடித்தள நடவடிக்கை. மக்கள் தங்கள் வாழ்விடத்தின் நிர்வாகத்தைச் செயல்படுத்த, தங்களில் ஒருவரையே தேர்வு செய்யும் எளிய சடங்காக அது அமைவதுதான் முறை; நியாயம்! இதனால்தான் உள்ளாட்சித் தேர்தல்களில் கட்சி அரசியல் வேண்டாம் என்று அறிஞர் அண்ணா போன்ற தலைவர்கள் கருதி வந்தனர். ஆனால், எங்கும் எதிலும் நீக்கமற நிறைந்துவிட்ட கட்சி அரசியல், உள்ளாட்சித் தேர்தல்களிலும் புகுந்து அதனை ரணகளமாக்கி வருகிறது. ஏப்ரல் 19 அன்று நடைபெற்ற சென்னை மாநகராட்சி இடைத்தேர்தலைக்கூட, கட்சி விரோத அரசியல் விட்டு வைக்கவில்லை.

நாளிதழ்கள் வெளியிட்டுள்ள 'மினிட் பை மினிட்' நிகழ்வுப் பட்டியலைப் பார்க்கிறபோது, 'இந்தத் தேர்தலில் புகுந்து அடிப்பது' என்று ஆளுங்கட்சியும்; 'இரண்டில் ஒன்று பார்த்துவிடுவது' என்று எதிர்க்கட்சியினரும் கங்கணம் கட்டிக்கொண்டு செயல்பட்டிருப்பது தெரிகிறது.

வாக்களிக்க வந்த எளிய மக்கள் மிரட்டி, விரட்டியடிக்கப்பட்டுள்ளனர்; கும்பல் கும்பலாகப் பலர் வந்து கள்ள வோட்டுப் போட முயன்றிருக்கின்றனர்.

இந்தக் களேபரத்துக்கு அ.தி.மு.கவும் தி.மு.கவும் பரஸ்பரம் ஒருவரையொருவர் குற்றம் சாட்டிக் கொள்வதில் அதிசயமில்லை. இப்படிப்பட்ட ரௌடித்தனத்தில் ஈடுபட்டது எந்தக் கட்சியானாலும், அது சர்வ நிச்சயமாக முன்வந்து குற்றத்தை ஒப்புக்கொள்ளப்



**கல்கி**



2005 மே 1
பார்த்திப சித்திரை 18
மலர் : 63
இதழ் : 40

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




போவதில்லை!

தி.மு.க. சார்பு வாக்காளர்கள் மிரட்டப்பட்டதால்தான் வன்முறை விளைந்தது என்று சொல்லப்படுகிறது. தங்களுக்கு நியாயம் வழங்காத இத்தேர்தலைப் புறக்கணிப்பதாக, தேர்தல் தினத்தில் காலை 11.30 மணிக்குப் பேட்டி அளித்துள்ளார் ஸ்டாலின்.

ஆனால், தி.மு.கவினரும் வன்முறையில் ஈடுபட்டிருக்கின்றனர். தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க சாலை மறியல் செய்து, சென்னையையே ஸ்தம்பிக்கச் செய்யதுள்ளனர். இத்தனைக்கும் பிறகு அ.தி.மு.கவை மட்டும் குற்றம் சாட்டுவதில் அர்த்தம் என்ன இருக்க முடியும்?

முறைகேடுகளில் ஈடுபடுவதற்கான வாய்ப்பும் வசதியும் ஆளுங்கட்சியினருக்கே அதிகமாக உண்டு என்பது, ஏகமனதாக யாவரும் ஒப்புக்கொள்ளும் விஷயம்தான். ஆனால், அவ்வாறு ஆளுங்கட்சி ஈடுபட்டது என்று நிரூபிக்க வேண்டுமானால், எதிர்க்கட்சி களத்தில் இறங்கி மோதாமல் இருக்க வேண்டும். அமைதியும் பொறுமையும் காத்து, முறைகேடுகள் மிகுந்த தேர்தலைப் புறக்கணிப்பதாக அறிவிக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் வாய்க்கு வாய் பேசி, கைக்கு கை அடிக்கிறபோது, எதிர்க்கட்சியின் புகாரிலும் வலு இல்லாமல் போய்விடுகிறது.

வருத்தத்துக்குரிய உண்மை என்னவெனில், இன்று அவ்வாறு பொறுமை காக்கும் பக்குவமோ, அரசியல் பட்டறிவோ எந்தக் கட்சியிடமும் இல்லை. எல்லாக் கட்சிகளுமே, தேர்தல்களின்போது 'புகுந்தடிக்க' பயிற்சி பெற்ற வன்முறையாளர்களை ஊக்குவித்து வளர்க்கின்றன. ஆட்சியைப் பிடிப்பது ஒன்றே அவர்களது குறிக்கோள். 'எதிர்த் தரப்பினர் என்ன செய்தாலும் நீங்கள் அமைதி காத்திடுங்கள்' என்று தலைவர்கள் முன்கூட்டியே எச்சரித்து வழி நடத்த வேண்டும். ஆனால், கட்சித் தலைமையும் சரி, வட்டாரத் தலைமையும் சரி, இரண்டு கார்ப்பரேஷன் கவுன்ஸில் வார்டுகளை, ஏதோ குபேரப் பட்டணங்கள் போல் கருதி, தேர்தல் களத்தை யுத்த களமாக்குகின்றன! வார்டு தேர்தலுக்கே இந்த கதி என்றால், இன்னும் சட்டமன்ற இடைத் தேர்தல், பொதுத் தேர்தலிலெல்லாம் தமிழகம் என்னென்ன பாடுபடுமோ!

எவ்வளவுக்கெவ்வளவு கௌரவ அரசியலுக்குப் பெயர்பெற்ற மாநிலமாக தமிழகம் இருந்ததோ, இப்போது அவ்வளவுக்கவ்வளவு பீஹார் பாணி அரசியலுக்கு மாறிவிட்டது. வாக்கிங் செல்லும் தலைவர்கள் கொலை செய்யப்படுகிறார்கள். வாக்குச் சாவடிகள் குண்டர்களின்




கட்டுப்பாட்டுக்கு மாறுகின்றன. ஜாதியின் பெயரால் உணர்வுகள் தூண்டப்பட்டு, வெறுப்புத் தீ பரவுகிறது!

அரசியல் கட்சிகள் எதுவும் திருந்துகிற வழியாகத் தெரியவில்லையாதலால், தேர்தல் கமிஷன்தான் இவர்களுடைய கொட்டத்தை அடக்க உறுதியாகச் செயல்பட வேண்டும். சட்டமன்ற இடைத்தேர்தல் இதோ வந்துவிட்டது. பொதுத் தேர்தலும் வெகு தொலைவில் இல்லை. அனைத்து வாக்குச் சாவடிகளிலும் இல்லாவிட்டாலும், பிரச்னை எழும் என்று எதிர் பார்க்கக்கூடிய வாக்குச் சாவடிகளில் மட்டுமாவது வீடியோ கண்காணிப்புக்கு ஏற்பாடு செய்ய லாம். முன்கூட்டியே அறிவிக்காமல், ரகசியமாகத் திட்டமிட்டு, தேர்தல் தினத்தில் அங்கங்கே கண்காணிப்புக் கேமராக்களைப் பொருத்தி படம் பிடிக்கச் செய்கிறபோது, குற்றவாளிகள் கையும் மெய்யுமாக அகப்பட்டுக் கொள்வார்கள். அவ்வாறு அகப்பட்டுக் கொள்வதற்கு அஞ்சி வன்முறை குறையவும் வாய்ப்பு இருக்கிறது.

புதிதாகப் பொறுப்பேற்றுள்ள தேர்தல் ஆணையாளர் டாண்டன், இந்த ஏற்பாடு குறித்து சிந்தித்துச் செயல்படலாம்.

உலகின் மிகப்பெரிய ஜனநாயகத்தில், காலம் செல்லச் செல்ல அரசியல் முதிர்ச்சி பெருகு வதற்குப் பதிலாகக் குறுகி வருகிறது என்பது மிகப்பெரிய சோகமே. கண்காணிப்பு கேமராக் களையும், போலீஸ் போதாதென்று ராணுவத்தையும் நாடும் அளவுக்கு முறைகேடுகளும் வன்முறையும் மலிந்திருப்பது தலைகுனிவுதான். ஆனால், அரசியல் அதிகாரம் என்பது ஏதோ தனிமனிதர்களின் சொத்து அல்லது பணம் பண்ணுவதற்கான கருவி அல்லது செல்வாக்கை அனுபவிப்பதற்கான வாய்ப்பு என்றெல்லாம் அரசியல்வாதிகள் எண்ணம் கொண்டிருக்கிற வரையில் வேறு வழி இல்லை... உண்மையான அதிகாரம் மக்களின் கையில்தான் இருக்கிறது; அவர்களுடைய பிரதிநிதிகளாகச் செயல்படுவது ஒரு புனிதப் பணி என்கிற உணர்வு அரசியல் தலைவர்களுக்கு என்றைக்கு வருகிறதோ, அன்று நாம் ரகசிய வீடியோ கண்காணிப்பு கேமராக் களுக்கும், ராணுவத்துக்கும் விடை கொடுக்கலாம். அதுவரை தேர்தல் வன்முறையையும் முறைகேடுகளையும் தவிர்க்க முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுத்துத்தான் ஆக வேண்டும். ○

# போலீஸ்காரன் மகன்!



ஐந்நூறு வருடங்களுக்குப் பிறகு, ஜெர்மனியைச் சேர்ந்த ஒரு கார்டினல், போப் ஆண்டவர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். கடந்த நூறு வருடங்களில், இத்தனை சீக்கிரமாக நான்கே சுற்று வாக்கெடுப்பில், போப் ஆண்டவர் தேர்ந்தெடுக்கப்பட்டது கிடையாது. மறைந்த இரண்டாம் ஜான் பால், போப் ஆண்டவராகப் பொறுப்பேற்றபோது அவருக்கு வயது ஐம்பத்தெட்டு. புதிய போப் ஆண்டவர் ஜோசப் ராட்சிங்கருக்கு, இப்பதவி அவரது எழுபத்தெட்டாவது பிறந்த நாளுக்குக் கிடைத்த பரிசு என்று சொல்லலாம். ஏப்ரல் பதினாறாம் தேதி அவரது பிறந்தநாள்!

உலகமெங்கும் வசிக்கும் கோடிக் கணக்கான கத்தோலிக்கர்களின் தலைமைப் பொறுப்புக்கு, அநேகமாக கார்டினல் ஜோசப் ராட்சிங்கர்தான் தேர்ந்தெடுக்கப்படுவார் என்ற பேச்சு அடிபட்டது என்றாலும், தேர்தலுக்கு முந்தைய வாரம், அவரது சொந்த நாடான ஜெர்மனியில் நடத்தப்பட்ட சர்வேயில் 29% பேர்தான் ராட்சிங்கருக்கு ஆதரவு தெரிவித்தனர். எதிர்ப்பாளர்கள் 36%.

கடந்த இருபதாண்டுகளுக்கும் மேலாக, மறைந்த போப் ஆண்டவருக்கு மிகவும் நெருக்கமாக இருந்தவர் ராட்சிங்கர். தனக்குப் பிறகு இவரே போப் ஆண்டவராக வரவேண்டும் என்று புனித ஜான் பால் விரும்பியதாகவும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

இவரின் அப்பா ஒரு போலீஸ்காரர். ஜெர்மனியில் ஹிட்லரின் சர்வாதிகார ஆட்சி கொடிகட்டிப் பறந்த கால கட்டத்தில் அமலில் இருந்த சட்டப்படி, கட்டாய ராணுவப் பணிக்கு அனுப்பப்பட்டார் ராட்சிங்கர். ஒரு சில ஆண்டுகளிலேயே ரகசியமாய் ராணுவத்திலிருந்து புறப்பட்டு வந்துவிட்டார். வரும் வழியில் அமெரிக்கப் படையினரால் சிறை பிடிக்கப்பட்டு, சில வார சிறைச் சித்ரவதைகளுக்குப் பின் விடுதலை செய்யப்பட்டார். பின்னர் மதபோதக பயிற்சியில் சேர்ந்து விட்டார்.

தாய்மொழியான ஜெர்மன் தவிர பிரெஞ்ச், லத்தீன், ஐரிஷ், ஸ்பானிய மொழிகள் உட்பட பத்து மொழிகள் அறிந்தவர். நல்ல உடல் ஆரோக்கியம் மிக்கவரான இவர், 91ம் ஆண்டு மூளையில் கட்டிவந்து ஆபரேஷன் செய்து கொண்டவர்.

கத்தோலிக்கர்களுக்குள்ளே தோன்றியுள்ள புரட்சிகரமான கருத்துகள், கிறிஸ்தவ மதத்தின் இதர பிரிவினர்களுடனான நல்லுறவு, அமெரிக்காவில் பாதிரியார்கள் சம்பந்தமான பாலுறவு பிரச்னைகளில் தீர்வுகாண கோடிக் கணக்கில் நஷ்டஈடு தரும் சூழ்நிலை, ஐரோப்பாவில் ஏற்பட்டுள்ள பாதிரியார்கள், கன்னியாஸ்திரிகள் பற்றாக்குறை எனப் பலவிதமான பிரச்னைகளை புதிய போப் ஆண்டவர் எதிர்நோக்க வேண்டியிருக்கிறதென மேற்கத்திய மீடியா பட்டியல் போடுகிறது. "எல்லாப் பிரச்னைகளையும் நிதானமாய் அணுகி, உலகை வழி நடத்துவார் புதிய போப்!" என்று நம்பிக்கையோடு சொல்கிறது வாடிகன் வட்டாரம்.

**- எஸ். சந்திரமௌலி**



# போட்டுத் தாக்கு!

எஸ்.ஆர்.பி.யிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள்...

1. யார் வேணும்னாலும் உங்ககிட்ட சவுடாலா சவால் விடலாம்னு ஆகிப் போனதால, 'குடிதாங்கி' மாதிரி உங்களுக்கு 'இடிதாங்கி'ன்னு பட்டம் கொடுக்கலாமா?

2. அது ஏன் ஜெயா டி.வி.யில வர்றப்ப மட்டும் தூங்கிக்கிட்டே இருக்கீங்க?

3. உங்களுக்கு கார் பின்னால மட்டும்தான் ஓடத் தெரியுமா?

4. வீட்ல 'காலி டப்பா'வையெல்லாம் என்ன பண்ணுவீங்க?

5. உங்களுக்கு ரொம்பப் பிடிச்ச விளையாட்டு 'உள்ளே - வெளியே'வா?

6. காங்கிரஸ்காரங்க வெளிநடப்பு பண்றப்போ, மொத்தமா வெளியேறுவீங்களா? கோஷ்டி கோஷ்டியா வெளியேறுவீங்களா?

7. சபை இருக்கிற அன்னிக்கு உங்களால 'மௌன விரதம்' இருக்க முடியுமா?

8. இப்ப நீங்க பேசறப்போ மைக் எல்லாம் ஒழுங்கா வேலை செய்யுதா?

9. உங்களுக்குக் கேள்வி கேட்க மட்டும்தான் தெரியுமா?

10. பாரிமுனைக்கு போய் சல்லீசான விலையில பத்து கர்ச்சீப் வாங்கினீங்களாமே... உண்மையா?

**- பத்துக் கேள்வி பரமு**



# காக்கிச் சட்டை

விஜயநிலா

நடுராத்திரிதான் அந்தச் செய்தி கிடைத்தது சுவாமி ஸ்டைலானந்தாவுக்கு. அவரது கணக்குப் பிள்ளை பவ்யமாக வந்து அந்தச் சேதியைச் சொன்னார்.

"நிசமாவா சொல்ற... அந்த ஆளு இங்க வரப் போறானா?"

"ஆமா. ஸ்டேஷன்ல இருந்து கிளம்பிட்டாராம். கூட வேற போலீஸ்காரங்க யாரும் வரலையாம். தனி ஆளா கிளம்பி நம்ம ஆசிரமத்துக்கு வந்துக்கிட்டிருக்காரு. என்ன நடக்கப் போவுதோ"

குவாலிஸ் ஜீப்பை தானே லாகவமாக ஓட்டிக்கொண்டு வந்த ஏ.எஸ்.பி. சிவஞானப்பிரகாசம், தனக்குத்தானே சொல்லிக் கொண்டார்.

'காதும் காதும் வச்ச மாதிரி வேலையை முடிக்கணும். ரஃப் அண்ட் டஃப்பான போலீஸ்தனத்தை எல்லாம் காண்பித்து விடக் கூடாது. ஸ்டைலானந்தா அப்புறம் பயந்து போய் விடுவார்.'

சுவாமி ஸ்டைலானந்தாவின் ஆசிரமம்.

உள்ளே போனார் சிவஞானப்பிரகாசம்.

சுவாமிஜியின் சொகுசு அறை. கணக்குப் பிள்ளை அறை வாசலில் தயங்கினார்.

"வாங்கோ..." என்றார்.

அறைக்குள் வந்தார். நிமிர்ந்து சுவாமிஜியைப் பார்த்தார். ஸ்டைலானந்தாவுக்கு வியர்த்துக் கொட்டியது. உடல் நடுங்கியது.

இரு கைகளையும் உயர்த்திய சிவஞானப்பிரகாசம் அப்படியே நெடுஞ்சாண்கிடையாக சுவாஜியின் கால்களில் விழுந்தார்.

"சுவாமிஜி... ப்ரமோஷன் லிஸ்ட்ல என் பெயர் இருக்காம். எனக்கு உங்க ஆசீர்வாதம் வேணும். வெளியில நான் பகுத்தறிவு பேசிக்கிட்டு இருக்கிறதால, வெளிப்படையா வந்து ஆசீர்வாதம் வாங்க முடியலை. அதான் தனியாளா ரகசியமா வந்தேன்." ●

# கலைஞன்

பொன் விழா ஆண்டில்

# அநுராகம்

இணைந்து வழங்கும்

# புத்தகக் காட்சி

**10%**
தள்ளுபடி

## நடைபெறும் இடங்கள்

- அரக்கோணம்
- அரியலூர்
- ஆண்டிப்பட்டி
- இராசபாளையம்
- ஈரோடு
- உடுமலைப்பேட்டை
- உளுந்தூர்பேட்டை
- ஊட்டி
- ஒசூர்
- கள்ளக்குறிச்சி
- கள்ளக்குடி
- காஞ்சிபுரம்
- காரைக்குடி
- காரைக்கால்
- கும்பகோணம்
- கும்மிடிப்பூண்டி
- கோபி
- கோவில்பட்டி
- கோவை
- சேலம்
- சீர்காழி
- தஞ்சை
- தாராபுரம்
- திண்டுக்கல்
- திட்டக்குடி
- தேனி
- திருச்சி
- திருவையாறு
- திருப்பூர்
- திருக்கழுக்குன்றம்
- திருப்பத்தூர்
- திருநெல்வேலி
- திருவாரூர்
- திருவண்ணாமலை
- திருச்செங்கோடு
- திருத்தணி
- தூத்துக்குடி
- நன்னிலம்
- நாகப்பட்டினம்
- நாகர்கோவில்
- நெய்வேலி
- பல்லடம்
- பவானி
- பழனி
- பரமத்தி வேலூர்
- பாண்டி
- புதுக்கோட்டை
- பெரம்பலூர்
- பேராவூரணி
- பொள்ளாச்சி
- மதுரை
- மன்னார்குடி
- மணப்பாறை
- மயிலாடுதுறை
- லால்குடி
- வாலாஜா பேட்டை
- வாணியம்பாடி
- விழுப்புரம்
- வேலூர்
- ஜெயங்கொண்டம்
- ஸ்ரீரங்கம்

புத்தகம் வாங்கும்
வாடிக்கையாளர் இந்த
விளம்பரத்தைக் கொடுத்து
8.00 ரூபாய் புத்தகம் ஒன்று
**இலவசமாக**
பெற்றுக் கொள்ளவும்

## அநுராகம் சிறப்பு வெளியீடுகள்

ஒவ்வொன்றும் **ரூ.8**

## ஏப்ரல் 29 முதல் மே 8 வரை

அள்ள வாங்க இது அறிவுச் சுரங்கம்

கலைஞன் பதிப்பகம்
19, கண்ணதாசன் சாலை,
தி. நகர், சென்னை – 17.
போன் : 24345641

# அடிமாடு!



**கார்முகில்**

விதிக்கப்படுபவைகளுக்கெல்லாம்
கட்டுப்படும் அவசியமெதுவும்
இல்லையாயினும்
கட்டுப்பட்டு - அன்றிக்
கட்டுப்படுத்தப்பட்டு...

மூத்திரச் சேற்றுக்கு மூக்கையும்
கொசுவுக்கு உயிரையும் கொடுத்து...
ஓட்டைக் கொட்டகையில் புரண்டெழுந்து

காட்டப்படும்போது மட்டும்
தாகம் மாய்த்து,
குளிப்பாட்டும்போது மட்டும்
குளித்து...
விடப்படும்போது மட்டும்
கொம்மாளித்துக்கொண்டோடி
தரைமுட்டி - வரப்பு சுரண்டி -
பெருமூச்சுவிட்டு
காது விடைக்க வெறித்துப் பார்த்து

இச்சைகளை உள்ளடக்கி
வெறும் வைக்கோலும் தவிடும்
புண்ணாக்கும்
(இடும்போது மட்டும்)
தின்று...
தனக்கான
உழைப்பில்லையாயினும்;

அசந்து நடந்தால் -
சாட்டையால்
உராயவும் முடியாதபடி
உடல் தடித்து...
தெம்பற்று விழுந்தால்...
தார்க்குச்சால் உடல் நொந்து...

அவிழ்த்து விடப்படும்வரை -
ஆண்டாண்டு காலமாய்
உழைத்துழைத்து
ஓய்ந்து விழுந்ததும்...

அடிமாடாய்
ஆக்கப்பட்டு
மாமிசமாகி-
மனிதனாய் ஆயின
மாடுகள்.

என்னவாய்
ஆனான் மனிதன்!



# மும்பை Xபிரஸ்

விரசம், ஆபாசம், டீசிங் எனத் தடம் புரண்டு காயம்பட்டுப் போன நகைச்சுவை தமிழ் சினிமாவுடையது. இதற்குத் தரமான நகைச்சுவை எனும் மருந்தை மயிலிறகால் தடவிவிடுவதுபோல, ஒரு தீவிர நகைச்சுவை வைத்தியராகவும் தமது பங்களிப்பைத் தொடர்ந்து ஆற்றி வந்திருக்கிறார் கமல். அந்த வகையில் சினிமா நகைச்சுவைக்கு ஒரு கலை வடிவம் கொடுத்து, தனது முந்தைய சாதனையை தாமே முறியடித்திருக்கிறார் மும்பை எக்ஸ்பிரஸ் மூலம்.

நடிப்புத்துறையில் கமல் எட்டிப் பிடித்திருக்கும் பல்வேறு பாத்திரப் பரிமாணங்களில் 'அவிநாசி' மற்றொரு கனபரிமாணம். கொஞ்சம் முட்டாள்தனம், நிறைய மனிதநேயம், கொஞ்சம் அசட்டுத்தனம், நிறைய வீரம் என்கிற கலவையான பாத்திரம். இப்படிப்பட்ட ஆளை தங்களோடு சேர்த்துக்கொண்டு, ஒரு பணக்காரப் பொடியனைப் பணத்துக்காக கிட்நாப் செய்ய முயற்சிக்கிறார்கள், மும்பை தாராவி குடிசைப் பகுதியில், நைந்து போன குப்பைகளைப் போலவே வாழ்ந்து வரும் சில அசட்டுக் கடத்தல்காரர்கள். கடத்தல் கூட்டணியில் எதிர்பாராமல் இடம்பெற வேண்டிய கட்டாயத்துக்கு அவிநாசி ஆளான அடுத்தகணம் முதல் வேகமெடுக்கிறது மும்பை எக்ஸ்பிரஸ். ஆஹா! எத்தனை நுணுக்கமான வளைவுகளின் வழியே, கடைக்கோடி ரசிகனையும் கை பிடித்துக்கொண்டு போய், நொடிக்கு நொடி வயிற்றைப் புண்ணாக்குகிறது கமலின் துல்லியமான திரைக்கதை!

பொதுவாக திரைப்படங்களில் ரம்மியமும் அழகும் ஆட்சி செய்யும் லொக்கேஷன்களைப் பார்க்கும்போது, அவற்றை நேரிலும் பார்க்க வேண்டும் என்ற ஆவல் உந்தித் தள்ளும். அப்படியொரு ஆவல், தலைக்குமேல் விமானங்களும் காலடியில் குப்பைகளும் பறந்தபடி மும்பையின் மேடு பள்ள வாழ்க்கையைப் பூடகமின்றிச் சொல்லும் தாராவி குப்பத்தைப் படத்தில் பார்க்கிறபோது ஏற்படுகிறது. இதுதான் கதைக்களம். இந்தக் குப்பத்தின் குறுகிய தெருக்கள், இங்கேயுள்ள கல்நார் குடிசைகளின் கூரைகள், குப்பை மேடுகள், பாழடைந்த தொழிற்சாலையின் ராட்சஸ புகைக்கூண்டு என, குண்டுப் பையனைச் சுமந்துகொண்டு கமல் நிகழ்த்தும் மோட்டார் சைக்கிள் சேஸிங், ஜாக்கிசானை கூடப் பதற வைக்கும் நிஜ சாகஸம். இன்னும் கிரேன் வழியே சிறுவனைக் கடத்தும் காட்சி, கிளைமாக்ஸில் மும்பை எக்ஸ்பிரஸ் ரயிலைத் துரத்திப் பிடிக்கும் காட்சி என்று மரண விளையாட்டு விளையாடும் கமலை, இந்திய சினிமாவின் பொக்கிஷம் என்றால் நிஜம்.

குதிரை சார்லி, சிறுவன் ஹார்த்திக், பசுபதி, நாசர், மனிஷா, சரளா, வையாபுரி என ஒவ்வொரு பாத்திரமும் வணிகக் கோட்பாடுகளுக்கு கட்டுப்படாத தனித்துவத்தோடு சிரிக்க வைக்கின்றன. குடும்பத்தோடு கோடையைக் கொண்டாட, ஒரு நவீன நகைச்சுவை எக்ஸ்பிரஸ்.

○ ஃபெயில் ○ ஜஸ்ட் பாஸ்,
○ ஆவரெஜ் ○ அபவ் ஆவரெஜ்
● டிஸ்டிங்ஷன்

- விஷுவல்தாசன்

"தேவனாம்பட்டினத்தில் விவேக் ஓபராய் செய்தது பத்து சதவிகிதம் மட்டுமே. அதுவும் பல தொண்டு நிறுவனங்கள் தந்தது. அவர் ஒரு விளம்பரப் பிரியர்!" என்று தமிழக சட்டப் பேரவையில் அதிரடியாக அறிவித்தார் முதல்வர் ஜெயலலிதா. இது உண்மைதானா என்றறிய நாம் தேவனாம்பட்டினத்துக்கு விசிட் அடித்தோம்.





• ஜெயலலிதா

பேருந்தை விட்டிறங்கியதுமே தெற்குக் கடற்கரைச் சாலையின் கிழ்புறமாக, எண்பத்தி நான்கு சிற்றுக் குடிசைகள் நம் கண்ணில் பட்டன. விசாரிக்க, விவேக் ஓபராய் கட்டித் தந்ததென்றார்கள். அங்கிருந்த பெண்களிடம் பேசினோம்.

"விவேக் ஓபராய் கடைசியா இப்ப ஏப்ரல் ரெண்டாந் தேதி வந்துட்டுப் போனார். மணல்ல ஒக்காந்து சோறு தின்ன முடியலைன்னு முறையிட்டோம். உங்களுக்கெல்லாம் இன்னும் ஒரு வாரத்துல சிமெண்ட் தரை போட்டுத் தரச் சொல்றேன்னு போனவர் தாங்க. மூணு வாரம் ஆகப் போகுது. இன்னமும் ஆளைக் காணோம். மும்பையிலேர்ந்து பறந்து வந்தவர், எங்களுக்கு ஏதோ பிரமாதமா செய்யப் போறார்னுதான் நெனைச்சிட்டு இருந்தோம். நாங்க ஏமாந்து

• பெண்கள் குழு...



# விளம்பரப் பிரியரா விவேக் ஓபராய்?

போனதுதான் மிச்சம்" என்று வேதனையுடன் கூறியது வளர்மதி, பூலோகம், பிரபாவதி, பிரியா, திலகம், காந்தா அடங்கிய பெண்கள் குழு.

"எண்பத்தி நான்கு சிற்றுக் குடிசைகள். குடும்பத்துக்கு ரெண்டு பாய். ஒரு பெட்ஷீட். பெண்களுக்குச் சேலை. ஆண்களுக்கு செருப்பு. தொண்ணூறு நபர்களுக்கு கட்டு வலை, நூற்றி இருபத்தெட்டு நபர்களுக்கு ஃபைபர் படகு வலை, ஐந்து விசைப்படகுகள், மராமத்துக்கு தலா ஒரு லட்ச ரூபாய், இதெல்லாம்தான் விவேக் ஓபராய் தந்தது. இந்தக் கிராமம் முழுசையும் நானே



• விவேக் ஒபராய் கட்டிக் கொடுத்த குடிசைகள்...



• ககன்தீப் சிங் பேடி



• விவேக் ஒபராய்

தத்து எடுத்துக்கறேன்னு இவரு சொன்னதால், ஊருக்குள்ளாற வேறெந்த தொண்டு நிறுவனங்களும் எட்டிக்கூடப் பார்க்கலை. அவரு ஒண்ணுமே செய்யலைன்னும் சொல்லிட முடியாது. அவரும் ஏதோ செஞ்சாரு'' என்று புள்ளி விவரங்களுடன் பேசினார் தேவனாம்பட்டினம் பேருந்து நிலையத்தில் பெட்டிக்கடை நடத்திவரும் பக்தன்.

குடும்பத் தலைவி கலைச்செல்வியின் வாயைக் கிளறிய போது, ''அவரு வரவும் நமக்கு வீடு, வாசல், பாத்திரம், பண்டம் எல்லாம் கெடைச்சுடும்னு அவரு பின்னாடியே சுத்திக்கிட்டு இருந்தாங்க தேவனாம்பட்டினத்துக்காரங்க. ஆனா அந்தக் கனவு சுனாமி மாதிரி சிதைஞ்சி போச்சுங்க. பேருக்கு எண்பத்தி நாலு பேருக்கு குடிசை போட்டுத் தந்தாரு. அதுவும் வேகமாக் காத்தடிச்சா இப்ப பறப்பமா, அப்புறம் பறப்பமான்னு இருக்குதுங்க'' என்றார்.

மீனவர்களான சங்கரும் ஆறுமுகமும்,

''விவேக் ஒபராய்கிட்டருந்து உதவிகள் வாங்கித் தர்ற மீனவப் பஞ்சாயத்து நேர்மையா நடந்துக்கலை. நிவாரண உதவிகள வேண்டியவங்களுக்குக் கிடைக்குறாப்புல பாத்துக்கிட்டாங்க. இதையெல்லாம் பார்த்து அவரு என்ன நினைச்சாரோ தெரியல, இந்த ஊரை அப்படியே 'அம்போ'னு விட்டுட்டுப் போயிட்டாரு!'' என்றனர்.

தேவனாம்பட்டின அரசு அதிகாரிகளிடம் விவேக் ஒபராய் பற்றி கேட்டபோது, வாயைத் திறக்க பயந்தனர்.

''நமக்கெதுக்குங்க வீண் பொல்லாப்பு, அம்மா சொன்னா எல்லாம் சரியாத்தான் இருக்கும்'' என்று ஒதுங்கினர். கடலூர் மாவட்ட ஆட்சித் தலைவர் ககன்தீப் சிங் பேடியும் 'விவேக் பற்றி மட்டும் வேண்டாம்' என்று கூறிவிட்டு, அரசு செய்து வரும் பணிகளைப் பற்றி மட்டுமே பிரதானப்படுத்தி பேசினார்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



• பக்தன்



• கலைச்செல்வி



• சங்கர்



• ஆறுமுகம்

# பின்கதைச் சுருக்கம்

சமீபத்தில் 'தி ஹிந்து' நாளிதழில் ஒரு புதிய புத்தகத்துக்கான மதிப்புரையை வாசித்தேன். Comrades of Jesus என்கிற அந்த நாவலின் பின்னணி, மிகவும் சுவாரஸ்யமானது.

நாவலாசிரியர் முதலில் அந்த நாவலை ஆங்கிலத்தில்தான் எழுத ஆரம்பித்தார். சில அத்தியாயங்கள் எழுதிய பிறகு, ஏனோ தொடர்ந்து எழுதாமல் நிறுத்தி வைத்தார். சில காலம் கழித்து அவர் இந்தியாவுக்கு வந்தபோது, அப்போது தினமணி கதிர் வார இதழின் ஆசிரியராக இருந்த நா. பார்த்தசாரதி அவரிடம் 'ஐந்து வருடங்கள் போலந்தில் வசித்துவிட்டு வந்திருக்கிறீர்களே, அந்த அனுபவத்தைக் கொண்டு ஒரு நாவல் எழுதுங்களேன்' என்று கேட்டுக் கொண்டார். தாம் முதலில் ஆங்கிலத்தில் எழுத ஆரம்பித்து, பாதியில் நிறுத்திய அந்நாவலை அவர் மறுபடி முதலிலிருந்து தொடங்கித் தமிழில் எழுத ஆரம்பித்தார்.

கதிரில் அது தொடராக வெளிவந்து, பிறகு நூலாகவும் ஆனபோது, அவரைச் சந்தித்த அத்தனை பேரும் தவறாமல் கேட்ட கேள்வி : "இந்த மாதிரி சர்வதேச அரசியல் விவகாரங்கள் அடங்கிய நாவலை நீங்கள் எப்படி தமிழில் எழுதினீர்கள்? இந்நாவல் ஆங்கிலத்தில் அல்லவா எழுதப்பட்டிருக்க வேண்டும்?"




ஆங்கிலத்தில் எழுத ஆரம்பித்து, பிறகு தமிழில் தொடரப்பட்டு, வெளியான பிறகு மீண்டும் அந்நாவல் ஆங்கிலத்துக்குப் போனது. இம்முறை ஸ்ருதி பத்திரிகையின் ஆசிரியர் கே.வி.ராமநாதன் அதை மொழிபெயர்த்திருந்தார். அதுதான் Comrades of Jesus.

தமிழில் அதன் பெயர் 'ஏசுவின் தோழர்கள்.' எழுதியவர் இந்திரா பார்த்தசாரதி.

எடுத்துக் கொள்ளும் விஷயங்களைப் பற்றிய தீர்க்கமான ஞானம், மிகைப்படுத்தாத அனுபவச் சேர்க்கை, சமரசங்களற்ற, கூர்மையான வெளிப்பாட்டு முறை, நுணுக்கமான அங்கதம் என்று இந்திரா பார்த்தசாரதியை நினைக்கும்போதெல்லாம் பலதும் ஞாபகத்துக்கு வந்தாலும், பிரமிப்பூட்டுவது அவரது எளிமைதான். எளிமை என்றால் படைப்பின் எளிமை மட்டுமல்ல.

ஒரு சந்தர்ப்பம். அபூர்வமாக அப்போது சென்னையில் மழை அடித்துப் புரட்டிக் கொண்டிருந்தது. ஐந்தாறு வருடங்கள் முன்னர் என்று

# எச்சரிக்கை... ஒட்டு கேட்கப்படுகிறது!

நினைவு. அமெரிக்காவிலிருந்து இ.பா. திரும்பி வந்திருக்கிறார் என்று, என் நண்பன் ஆர். வெங்கடேஷ் போனில் சொன்னான். "வருகிறாயா, போய்விட்டு வரலாம்?" என்றான்.

அலுவலக வேலையை அப்படியே போட்டுவிட்டுக் கிளம்பினேன்.

அத்தனை பெரிய ஃப்ளாட்டில் அவர் தனியாக இருந்தார். தவிரவும் உறங்கிக் கொண்டிருந்திருக்கிறார். ஒரு வயதான மனிதரைத் தூக்கத்தின் நடுவே தொந்தரவு செய்துவிட்டோமே என்று உடனே எங்களுக்கு மிகவும் வருத்தமாகிப் போய்விட்டது.

மன்னிப்புக் கேட்டுக்கொண்டபோது, எங்களைச் சமாதானப் படுத்திவிட்டு இ.பா. சொன்னார் : "இப்படி எதிர்பார்க்காத நேரத்துல யாராவது வரமாட்டாங்களான்னு எதிர்பார்த்துத் தானே, எத்தனை ஆயிரம் மைல் தாண்டி வந்திருக்கேன்? வாங்க உள்ள..."

கடிகாரத் துல்லியத்தில் எல்லாம் நடக்கும் அமெரிக்க வாழ்க்கை முறை, அவரை எத்தனை பாதித்திருந்தது என்பதை என்னால் உணர முடிந்தது.

இ.பா. நீண்ட காலம் கல்வித் துறையில் பணியாற்றியவர். தில்லியில் அவர் வசித்துக் கொண்டிருந்த போது, ஒரு முறை ஏதோ ஒரு சர்வதேசப் பேராசிரியர் பரிமாற்ற திட்டக் குழுவில் உறுப்பினராக இருந்தார். போலந்தில் உள்ள வார்ஸா பல்கலைக்கழகத்து மாணவர்களுக்குத் தமிழ் சொல்லிக் கொடுக்க, இங்கிருந்து ஒரு பேராசிரியரைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் பணி. அதேபோல அங்கிருந்து ஒரு பேராசிரியர் இங்கே வந்து இந்திய மாணவர்களுக்கு போலிஷ் சொல்லிக் கொடுப்பார் என்பது போல ஏற்பாடு.

போலந்துக்கு அனுப்ப இ.பா. தேர்ந்தெடுத்திருந்த ஒரு பேராசிரியர், கடைசி நேரத்தில் போக மறுத்துவிட்டார். காரணம், அப்போது போலந்து தேசம் சந்தித்துக் கொண்டிருந்த அரசியல் சிக்கல்கள்.

சிக்கல் என்றால் மிகவும் வினோதமான சிக்கல் அது. போலந்து, நீண்ட நெடுங்காலம் ரஷ்யாவின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த ஒரு சிறிய நாடு. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி வருடங்களில், அங்கே அடிக்கடி புரட்சிகள் நடந்து ஒரு மாதிரி வெட்டிக் கொண்டு தனி நடா டானது. முதல் உலகப் போருக்கு முன்னால் சுமார் நூறாண்டு காலம் ஒட்டுமொத்த ஐரோப்பாவும் போலந்தை வெறுத்து ஒதுக்கி, ஐரோப்பிய வரைபடத்திலிருந்தே அந்நாட்டை நீக்கியிருந்தது. உலகப் போர்களுக்குப் பின்னால் சமரசமெல்லாம் நடந்து முடிந்தபிறகு, அங்கே ஏற்பட்ட கம்யூனிஸ்ட் ஆட்சியில் மக்கள் வரையறுக்கப்பட்ட சௌகரியங்களையும், வரையறுக்கப்படாத அசௌகரியங்களையும் ஒரு சேர



* இந்திரா பார்த்தசாரதி




3

பா.ராகவன்

அனுபவித்துக் கொண்டிருந்தார்கள்.

கம்யூனிஸ்ட் ஆட்சியின் அஸ்திவாரமான தொழிலாளர் வர்க்கத்துக்கே அங்கே ஆட்சி பிடிக்கவில்லை. உலக சரித்திரத்திலேயே முதல் முறையாக, ஒரு கம்யூனிஸ்ட் அரசுக்கு எதிராகத் தொழிலாளர்கள் சேர்ந்து புரட்சி செய்ய ஆரம்பித்தார்கள்.

இம்மாதிரியான ஒரு அரசியல் சூழ்நிலையில், மேற்படி பேராசிரியர் போலந்துக்குப் போக மறுத்துவிட்டதால், போலந்துக்கான இந்தியத் தூதர், இ.பா. வையே தமிழ்ப் பேராசிரியராக வார்ஸாவுக்கு வரச்சொல்லிவிட்டார். வேறு வழியில்லாமல்தான் அவர் போலந்துக்குப் போனார்.

அவர் வார்ஸாவைச் சென்று அடைந்தபோது, அங்கே தேசமே ஸ்தம்பித்திருந்தது. நாடு தழுவிய வேலை நிறுத்தம்.

என்ன செய்வதென்று புரியாமல் திண்டாடியிருக்கிறார் இ.பா. பிறகு மாணவர்களே அவரிடம் வந்து சூழ்நிலையை விளக்கி, 'எங்களுக்குத் தமிழ் கற்றுக் கொள்வதில் ஆர்வம் இல்லாமல் இல்லை. ஆனால் இது தேசமே ஒருங்கிணைந்து மேற்கொண்டிருக்கும் வேலை நிறுத்தம். நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்' என்று கேட்டுக் கொண்டு, கல்லூரி நேரத்துக்குப் பிறகு அவர் வீட்டுக்கே வந்து படித்து விட்டுப் போனார்களாம்.

ஒருநாள் யாருக்கோ போன் செய்யலாம் என்று தொலைபேசி ரிசீவரை எடுத்திருக்கிறார். உடனே பதிவு செய்யப்பட்ட ஒரு குரல் ஒலித்திருக்கிறது. போலிஷ் மொழிக்குரல். இ.பா.வுக்கு போலிஷ் மொழி அப்போது தெரியாது. என்ன பேசுகிறார்கள் என்று புரியவில்லை. ஆனால் குரலின் தொனி மட்டும், எச்சரிக்கை செய்வதுபோல் இருந்திருக்கிறது. வைத்துவிட்டு சிறிது நேரம் கழித்து, மீண்டும் முயற்சி செய்து பார்த்தபோது, மீண்டும் அதே குரல். அதே போலிஷ் மொழி. அதே எச்சரிக்கை, டயல் செய்வதற்குள்ளாகவே ஒலிக்கத் தொடங்கிவிடுகிற குரல்.

விவரம் தெரிந்து கொள்ளலாம் என்று இ.பா. அங்கிருந்த இந்தியத் தூதரக அதிகாரியிடம் போய்க் கேட்டிருக்கிறார். வந்த பதில்... 'வேறொன்றுமில்லை. உங்கள் தொலைபேசி அழைப்புகள், பேச்சுகள் அனைத்தும் அரசாங்கத்தால் ஒட்டுக் கேட்கப்படுகிறது ; எச்சரிக்கையாகப் பேசவும் என்று சொல்கிறார்கள்'

இ.பா. போலந்தில் இருந்த ஐந்தாண்டுகளும் பிரச்னைக்குரிய காலம்தான். ஒன்றல்ல, இரண்டல்ல... அவரது நூற்றுக் கணக்கான வினோத அனுபவங்கள் சுலபத்தில் மற்றவர்களுக்குக் கிடைக்காதவை.

இ.பா.வின் 'ஏசுவின் தோழர்களை'ப் படிக்கும்போது முதல் சில பக்கங்களுக்குத்தான் புதிய தேசம், புதிய மக்கள் எனகிற உணர்வு நமக்கு இருக்கும். போகப் போக தேச எல்லைகள், மொழி எல்லைகள் மறைந்து, அம்மக்களின் உணர்வுபூர்வமான வலியையும் வேதனையையும் நம்மாலும் அனுபவிக்க முடியும்.

இன்றைக்கும் ஏசுவின் தோழர்களை தமிழில் எழுதப்பட்ட ஓர் ஆங்கில நாவல் என்று சொல்பவர்கள் இருக்கிறார்கள். இப்போது அது ஆங்கிலத்தில் வெளிவந்திருக்கிறது (ரூபா அண்ட் கோ வெளியீடு). இனி, ஆங்கிலத்தில் வந்திருக்கும் ஒரு போலிஷ் நாவல் என்று சொல்வார்களாயிருக்கும்.

ஆனால் இ.பா.வைக் கேட்டுப் பாருங்கள், பதிலே சொல்ல மாட்டார்... சிரிப்பார்.

(தொடரும்)





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2005

படைப்பாளிகளே,
வாசக எழுத்தாளர்களே!
நீங்கள் அனைவரும் ஆவலோடு
எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்
சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு -ரூ.10,000**
**இரண்டாம் பரிசு - ரூ.7,500**
**மூன்றாம் பரிசு - ரூ. 5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட் பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

## விதிமுறைகள்:

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்தான் என்பதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி ஜெராக்ஸ் போன்றவை) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக் கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 032**

- கதைகள் வந்து சேர கடைசி தேதி: ஜூன் 15
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளியாகும்.

படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

**- ஆசிரியர்**

*அவன் பார்த்ததுமே நான் பூத்து விட்டேன்!*
*அந்த ஒரு நொடியை நெஞ்சில் ஒளித்து வைத்தேன்!*
*நான் குழந்தை என்றே நேற்றும் நினைத்திருந்தேன்!*
*அவன் கண்களிலே என் வயதறிந்தேன்!"*

'காதல்' படத்தில் பாப் ஷாலினி உருகி உருகிப் பாடிய வரிகள் இன்று உண்மையாகிவிட்டன. தன் மனம் கவர்ந்தவரைக் காதலித்து, கைப்பிடித்து திருமதியுமாகிவிட்டார் 'பாப்' ஷாலினி. பூரித்துக் கிடந்தவரை சந்தித்தபோது நாணிய படியே பேசினார்...

"அவர் பேரு பாலாஜி ராஜகோபாலன். ஒரு சுவீடிஷ் கம்பெனியில மார்க்கெட்டிங் மானேஜர். பாடகரும் கூட! மூணு வருஷத்துக்கு முன்னாடி, ஒரு ரிகார்டிங் தியேட்டர்ல சந்திச்சோம். இவர் வேற பாட்டுப் பாடினாரு. நான் வேற பாட்டுப் பாடினேன். இவரோட வாய்ஸ் எனக்குப் பிடிச்சிருந்தது. அதனால, செல் நம்பர் வாங்கி வைச்சேன். அப்புறம் மறந்தே போயிட்டேன். ஆறு மாசத்துக்கப்புறம் 'ஹவ் ஆர் யூ?'ன்னு ஒரு மெஸேஜ் அனுப்பினாரு. எனக்கு யாருன்னே தெரியல. விட்டுட்டேன். திருப்பி ஒரு மாசம் கழிச்சு அதே மெஸேஜ். நானும் 'ஹு இஸ் திஸ்?'ன்னு அனுப்பினேன். இவரு கொஞ்சம் சுத்தி, சுத்தி மெஸேஜ் அனுப்பி, கடைசியா அன்னிக்கு ரிகார்டிங்ல பாடின வரிகளை மெஸேஜா அனுப்பின பிறகுதான், எனக்கு யாருன்னே புரிஞ்சுது. அதுக்கப்புறம் எப்பவாவது போன்ல பேசிக்குவோம்.

ஒரு நாள் நான் ஜிம்முக்குப் போயிருந்தேன். செம சர்ப்ரைஸ், அங்க இவரை மீட் பண்ணினேன்! அந்த 'ஜிம்' நாட்கள்ல, ஜம்முன்னு நிறைய பேசினோம். நான் எக்ஸர்சைஸ் பண்றதுக்குன்னே காஸ்ட்லி ஷூ வாங்கிக் கொடுத்தாரு. என்மேல ரொம்ப அக்கறை காட்ட ஆரம்பிச்சாரு. என்னோட கேரியரை ரொம்ப உற்சாகப்படுத்தினாரு. அப்பவே என் மனசுல சேர் போட்டு உட்கார்ந்துட்டாரு. கரெக்டா ஒரு வருஷத்துக்கு முன்னாடி ஒரு நாள் நான் பாண்டிச்சேரி பீச்ல நிக்கிறேன். இவர் போன் பண்றாரு... அப்படியே காதலையும் சொன்னாரு. எனக்குள்ள ஏதேதோ சந்தோஷமா உணர்ந்தேன். ஆனா நான் ஒத்துக்கல. அப்படியே ஒரு மாசம் போக்குக் காட்டினேன். அப்புறம் முடியல. சரண்டர் ஆயிட்டேன்" - சொல்லும்போதே ஷாலினியின் கண்களில் காதல் ததும்புகிறது.



"இப்போது என் முறை" என்று குறுக்கே புகுந்தார் பாலாஜி. "செலிப்ரேட்டிங்கற பந்தா ஷாலினிகிட்ட துளிக்கூட கிடையாது. பெரியவங்களை மதிக்கத் தெரிஞ்ச பொண்ணு. என் அப்பாகிட்ட எப்படி சொல்றதுன்னு தான் தவிச்சுக்கிட்டிருந்தேன். அன்னிக்கு அப்பா பிறந்த நாள். காலை 6 மணி. நான் நல்லா தூங்கிக்கிட்டு இருந்தேன். காலிங்பெல் அடிக்குது. கதவைத் திறந்தா, ஷாலினி! கையில கோயில்

**"என் மனசுல சேர் போட்டு உட்கார்ந்துட்டாரு!"**

பிரசாதம். அர்ச்சனைத் தட்டு, பெரிய பூங்கொத்தோட வந்து, அப்பா கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கினா. அவ்ளோதான்... வீட்டுல எல்லாருடைய இதயத்துலயும் ஈஸியா நுழைஞ்சிட்டா. அது போக, எங்க குடும்பத்துல எல்லாருமே பாடுவோம். இசைன்னா உயிர். அதனால இப்போ என்னைவிட ஒரு பங்கு அதிகமாகவே வீட்டில் உள்ளவங்க ஷாலினியை நேசிக்கிறாங்க!'' என்றவர், ''போன பிப்ரவரி 14 பத்தி சொல்லியே ஆகணும்'' என்று பிடிகையோடு தொடர்ந்தார்... ''எனக்கு காதலர் தினம் பத்தி



# டும்... டும்...!

ஐடியாவே கிடையாது. அது என்ன தேதியில வரும்னு கூடத் தெரியாது. இந்த வருஷம்தான் அதெல்லாம் தெரிஞ்சுக்கிட்டு நைட் 12 மணிக்கு ஷாலினிக்கு 'பொக்கே' அனுப்பினேன். ஆனா இவளோ 50 கிரீட்டிங் கார்ட்ஸ், பொக்கே, பெர்ஃப்யூம், வாட்ச்னு நிறைய பரிசுகள் கொடுத்து என்னை திக்குமுக்காட வச்சுட்டா!

ஒரு ஸ்டேஜ் ஷோவுல 'திருமலை' படத்துல வர்ற 'அழகூரில் பூத்தவளே' பாட்டை இவ பாடினப்போ, அப்படியே மயங்கிட்டேன். இவதான் படத்துலயும் பாடியிருக்கான்னு நினைச்சுக்கிட்டு, ஊர் முழுக்கச் சொன்னேன். அப்புறம்தான் 'நான் பாடல, அது சுஜாதா பாடினது'ன்னு சொன்னா. திரும்பி எல்லார் கிட்டயும் போய் சொன்னேன். என்னன்னே தெரியல... இப்பல்லாம் எந்த நல்ல பாடல்களைக் கேட்டாலும் ஷாலினி பாடுற மாதிரியே இருக்குது.'' என பாலாஜி வியக்க, ''இப்படித்தான் என்னை ஏத்திக்கிட்டே இருப்பாரு!'' என்று ஷாலினி சிரிக்க, அங்கே கலர்ஃபுல் தீபாவளி!

''நாங்க காதலிக்கிறப்போ, ஒரு நாள் சாயங்காலம் ஏழு மணிக்கு பேச ஆரம்பிச்சோம். பேச்சு அப்படியே பாட்டா மாறிடுச்சு. எஃப்.எம். மாதிரி தொடர்ந்து பாடிக்கிட்டே இருந்தோம். மறுநாள் காலைல 6 மணிக்குதான் போனை வைச்சோம். எங்க கல்யாண ரிசப்ஷன்ல கூட நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து பாடினோம். இசை, காதல் இரண்டையும் எங்களால பிரிச்சுப் பார்க்க முடியல!'' என்கிற ஷாலினியின் வார்த்தைகளை பலமாக ஆமோதிக்கிறார் பாலாஜி. பாவம், இனி அவரால் வேறென்ன செய்ய முடியும்!

- ஷிவ்

# அம்மா



லட்சுமி நடராஜன்

கண்களால் பிரியாவிடை கொடுத்தான் மாதவன்... சுகந்திக்கு...

பிரசவத்துக்காக அம்மா வீடு செல்லும் சுகந்தி... எப்போது பார்த்தாலும் மாதவனின் அம்மாவுடன் எதிர்த்துப் பேசி சண்டையிடும் சுகந்தி... குழந்தையுடன் வரும்போது கண்டிப்பாக தனிக்குடித்தனம் என்று பிடிவாதம் பிடிக்கும் சுகந்தி...

ஆயிற்று... பிரசவ நேரமும் நெருங்கியது... டாக்டரிடம் ஏற்கெனவே சொல்லியிருந்தபடி, குழந்தை பிறக்கும் சமயம் 'லேபர் ரூமில்' சுகந்தியின் விருப்பப்படி மாதவனும் இருந்தான்.

அழகான ஆண் குழந்தை.... சுகந்தி மாதவனைப் பார்த்து புன்னகையோடு சொன்னாள்... "ரொம்ப தேங்க்ஸ்... என் விருப்பப்படி பிரசவம் ஆகுற சமயம் நீங்க பக்கத்திலேயே இருந்ததுக்கு."

மாதவன் நினைத்துக் கொண்டான்... 'ஆனா, உன்னோட இன்னொரு கோரிக்கையை நிறைவேற்ற முடியாது சுகந்தி... ஒரு பெண்ணுக்கு பிரசவம்ங்கறது மறு பிறவின்னு எனக்குப் புரிய வச்சுட்ட... இப்படித்தானே என் அம்மாவும் என்னைத் துடிதுடித்து பெத்தெடுத்திருப்பாங்க! அவங்களைப் போய் முதியோர் இல்லத்தில் விடுவதா? நோ சான்ஸ்... பிரசவ சமயத்தில் நீ கூடவே இருக்கச் சொன்னதும் நல்லதுதான்... இல்லாட்டா எனக்கு அம்மாவோட அருமை தெரிஞ்சிருக்காதே...!

**பெருமூச்சின் நீளம்**
**- ஆண்டாள் பிரியதர்ஷினி**

**ஏகம் பதிப்பகம், 3, பிள்ளையார் கோயில் 2ஆம் சந்து, சென்னை - 5**




மொத்தம் பதினாறு கதைகள். ஒவ்வொரு கதையிலும் உணர்ச்சி வேகத்தில் கதை ஆசிரியரே பொங்கி வழிகிறார். எளிமையாக எழுதப் போகிறோமா? கவிதை நடையா? பேச்சு வழக்கா? உணர்ச்சிக் குவியலா? அடக்கி வாசித்தா? சத்தம் போட்டா? என்றெல்லாம் கட்டுப்பாடு எதுவும் அவர் வைத்துக் கொண்ட மாதிரி தெரியவில்லை. எல்லாக் கதைகளிலும் எல்லாமும் இருக்கிறது. அரசியல்வாதிகளின் இம்சை, சிறுமி மீதான பாலியல் வன்முறை, பெண் பொங்குதல் (தெலுங்குப் பட க்ளைமாக்ஸ் தோற்கும்)... இப்படி எழுதுகிறவர்களின் ரெடிமேட் களங்களில் ஆண்டாள் பிரியதர்ஷினியும் புகுந்து புறப்படுகிறார்.




எனக்குப் பிடித்த கதைகளுக்கு சில அடையாளங்கள் இருக்கின்றன. புதிய களம், திறமையான கதை மொழி, நம்பத்தகுந்த கதாபாத்திரங்கள், நவீன பாதை, ஒரு வாசிப்பில் மனதைப் பற்றிக் கொள்கிற கவனம், எங்கோ ஒரு மாறுதலான கோணம், கலையை உயர்த்துகிற முனைப்பு, மறைந்து கரைந்து போன கதாசிரியன், இப்படி சில வற்றைச் சொல்லிக்கொண்டே போகலாம்.

நான் சொல்லிவிட்ட இந்த சிலவற்றுக்கும், சொல்லாமல் விட்ட பலவற்றுக்கும் நேர் எதிரானவை ஆண்டாள் பிரியதர்ஷினியின் கதைகள்.

**- வஸந்த்செந்தில்**

**குறைந்த ஒளியில் வினோ**
**- வஸந்த்செந்தில்**

**குமரன் பதிப்பகம், 3, முத்து கிருஷ்ணன் தெரு, சென்னை - 17**

இந்த சிறுகதைத் தொகுப்பை வாசித்து முடிக்கும்போது கைகளில் மருத்துவமனை வாசனை. நட்புணர்வோடு கை குலுக்கி வசியம் செய்கிறது வஸந்த் செந்திலின் எழுத்து.

விஞ்ஞானம் x மெய்ஞானம், அறிவியல் x ஜோதிடவியல் என்கிற இரு துருவ ஊசலாட்டங்கள் 'குறைந்த ஒளியில் வினோ' கதைக்கு வானவில் வர்ணங்கள் சேர்க்கின்றன.

மருத்துவர்களின் சேவை மனப்பான்மை கேள்விக் குறியாகியிருக்கும் கந்தகப் பொழுதில், அவர்களின் மனிதகுலக் காதலை, இயல்பான போக்கில் சொல்கிறது 'ஊர் விளையாட்டு.'

'பிளாஸ்டிக் பூமி' - தேசம் முக்கியமா? அமெரிக்க டாலரின் வாசம் முக்கியமா? என்கிற கேள்வியைக் கிளப்புகிறது. மருத்துவச் சேவை இன்னமும் கனவாகவே இருக்கும் இந்திய கிராமங்களின் வலியைச் சொல்கிறது.

'ஸ்வர்ணமால்யாவின் காதல் கதை' அறிவு ஜீவியான இந்த நாள் பெண் பற்றியது.

"உங்க பொண்ணுகிட்டே என்னமோ குறையுது" என்கிறானே சித்தார்த்... என்னவாயிருக்கும்?

எல்லாக் கதைகளுமே இது போன்ற பல கேள்விகளை மறைமுகமாக எழுப்பிச் செல்கின்றன. பதில்களைத் தேடி மனசு கிளம்பிச் செல்கிறது.

**- ஆண்டாள் பிரியதர்ஷினி**

க் பேங்க்

# சென்னைக்கு

‘சந்திரமுகி’ படம் பார்க்க எப்படிப் போகலாம்?

சைக்கிள், ஆட்டோ, பைக்...? ஆனால் ‘நாம ஃபிளைட்ல கிளம்பிப் போகலாம்’ என்று ஜப்பானிலிருந்து வந்திருக்கிறார்கள் ரஜினி ரசிகக் கண்மணிகள்.

ஜப்பானிலுள்ள ஒஸாகா நகர ரஜினி ரசிகர்கள், சந்திரமுகி படம் வெற்றி பெற வேண்டுமென்று சிறப்புப் பிரார்த்தனை நடத்தியுள்ளனர். அதுவும் எப்படி? ஒரு பஸ்ஸை வாடகைக்கு எடுத்து, காலை முதல் இரவு வரை ரஜினி படங்களை, பாடல்களை ஓடவிட்டு, பட்டையைக் கிளப்பியிருக்கின்றனர்.

"இதுக்கு முன்னாடி ‘ஷாங்காய்’னு ஒரு டிரெய்னை வாடகைக்கு எடுத்தோம். ரசிகர்களெல்லாம் ஒண்ணா சேர்ந்து ‘ரஜினி மசாலா சிஸ்டம்’னு அவரோட பாட்டுக்கள், சினிமான்னு கலந்து போட்டு செம ரகளை பண்ணினோம்" என்று குஷியாகச் சொல்கிறார் சுப்ரமணியன். ஒஸாகா நகரத்தில் ‘திலகா’ என்னும் சௌத் இந்தியன் ரெஸ்டாரண்ட் நடத்தி வரும் தமிழர். தன் மனைவி கோமதியுடன் சந்திரமுகியை ரசிக்க, ஐந்து ஜப்பானியரையும் அழைத்து கொண்டு சென்னைக்கு வந்துள்ளார்.

"ஜப்பான்ல 2500 பேர் ரஜினி ரசிகர்

* எங்கெங்கு காணினும் ரஜினியடா!





* நான் ஒரு தடவ சொன்னா...

* வர்ட்டா!



• தேவுடா தேவுடா...!

களா பதிவு பண்ணியிருக் காங்க. ரஜினி படம்னா, குறைந்தபட்சம் 100 தடவையாவது பார்ப்பாங்க. ஒவ் வொரு படத்திலயும், அவர் எந்தெந்த ஸீன்ல, என்ன கலர் செருப்பு போட்டுக் கிட்டு வருவார்னு கூட சொல்வாங்க. அவ்வளவு ஈர்ப்பு அவர் மேல! எப்படி ரஜினி மேல இவ்வளவு க்ரேஸ் உண்டாச்சுன்னு என் னால இன்னும் கண்டுபிடிக்க முடியல. ரஜினி பாட்டை பிசிறில்லாம பக்காவா பாடு வாங்க. சந்திரமுகி பாட்டு வந்தவுடனே, நெட்ல டௌன் லோடு பண்ணி ஆர்வமா கேட் டாங்க. 'தேவுடா' பாட்டுல ஒவ் வொரு வார்த்தைக்கும் என்னைக் கேட்டு அர்த்தம் தெரிஞ்சிக்

# வந்த ஜப்பான்!



• கதம் கதம்!



• ஜப்பான் பாட்ஷா!

கிட்டாங்க. அதுக்கு டான்ஸ் ஸ்டெப் எப்படி இருக்கும்னு அவங்களா உருவாக்கினாங்க. சந்திரமுகி படம் பார்க்கறப்போ, இவங்க டான்ஸ் ஸ்டெப்பும், படத்துல வர்ற டான்ஸ் ஸ்டெப்பும் கிட்டத்தட்ட ஒரே மாதிரி இருக்க, தியேட்டர்லயே செம குஷி ஆயிட்டாங்க.

ஷாருக்கான், அமிதாப் எல்லாம் கூட ஜப்பானுக்கு வந்திருக்காங்க. அங்கிருக்கற



• சுப்பிரமணியன் - கோமதி

வங்க மனசுல இடம் பிடிக்க முடியல. ஆனா ஜப்பானுக்கே வராத ரஜினி மேல இவங்களுக்கு ஏகப்பட்ட காதல். ரஜினி மூலமா ஜப்பான்ல தமிழ் வளருதுங்கறது உண்மை'' ஆச்சர்யங்களை அள்ளித் தெளிக்கிறார் சுப்ரமணியன்.

அந்நேரத்தில் தன் செல்லில் 'சிங்க நடை போட்டு' பாட்டை ஒலிக்கவிட்டு, ஸ்டைலாக ரஜினி மாதிரி ஆட ஆரம்பித்துவிட்டார், சாப்ட்வேர் இன்ஜினியரான மியூரா. "ஆ... ஊ... யே" என கை கால்களை மேலும் கீழும் உதைத்து, "இது சூப்பர் ஸ்டாரோட சந்திரமுகி பைட்" என நம்மைப் பார்த்துக் கண்ணடித்தார். தன் மொபைல் முழுவதும் ரஜினியின் பாடல்களை ஸ்டோர் செய்து வைத்துள்ளார். அவரைவிட ஒருபடி அதிகம் போய், தனது வாட்ச், மோதிரம், கழுத்துப் பட்டை, செயினிலுள்ள டாலர், ஹேண்ட் பேக், செருப்பு, கீ செயின், மொபைல் போன் கவர், ஸ்க்ரீன் சேவர் என அனைத்துப் பொருள்களிலும் ரஜினியை குடி வைத்திருக்கிறார் குவாபாரா.

"நான் ஒரு தடவ சொன்னா.." ஒற்றை விரலை ஸ்டைலாகக் காட்டி அழகாக தமிழ் பேசி அசத்தினார் சிசான் பாஷு.

"ரஜினி பிறந்தநாளை நாங்க ரொம்ப நன்றாகக் கொண்டாடுவோம். இங்கே உள்ள ரசிகர்கள் கூட சந்தோஷமா சந்திரமுகி பார்க்க வந்திருக்கேன். சூப்பர் ஸ்டார் எது பண்ணினாலும் பிடிக்கும்'' எனச் சிரிக்கிறார் அங்கே ஆட்டோ ஓட்டும் பாட்ஷாவான அசேகாவா. "சூப்பர் ஸ்டாரின் வழக்கமான ஸ்டைல், வசனம் இல்லை. ஆனாலும் ரொம்பப் புதுசாக இருக்கிறது சந்திரமுகி. இன்னும் நிறைய முறை பார்ப்பேன். பாட்டு எல்லாம் இனிமையாக இருக்கிறது.

'முத்து' படத்தில் மீனாவும், 'சந்திரமுகி'யில் ஜோதிகாவும் ரொம்ப அழகாக இருக்கிறார்கள். அழகாக வசனம் பேசுகிறார்கள். எனக்கும் கூட ரஜினியுடன் ஹீரோயினாக நடிக்க ஆசை உள்ளது.

அவரைப் பார்த்தால் மனம் சந்தோஷமாகிறது. அவரது பாடல்களால் நம்பிக்கை பிறக்கிறது. சந்திரமுகியில் கடைசியாக அணிந்து வரும் 'மகாராஜா' உடையை வாங்க ஆவலாக இருக்கிறேன்'' என்று மூச்சு விடாமல் வலம்புரிஜான் ரேஞ்சிற்கு தூய தமிழ் பேசிய ஒநிசி, "கண்டிப்பாக ஒரு நாள் ரஜினியை சந்திப்பேன். அப்போது அவரிடம் பேசுவதற்காகவே தமிழ் கற்றுக் கொண்டேன்'' என்று நம்மை ஆச்சர்யப்படுத்தினார்.

தமிழ்நாட்டு அரசியலில் தடம் பதிக்கத் தவறிய ரஜினி, ஜப்பானுக்குச் சென்றால் பிரதமராகவே ஆகிவிடலாம் போல!

சந்திப்பு : **முகில்**

# போதும் விளையாட்டு!

## - விலகும் வீராங்கனை



மாரடோனா, ரொனால்டோவுக்குக்கூட இந்த ரெக்கார்டு கிடையாது. இதுநாள் வரை, தான் பங்கெடுத்துக் கொண்ட எந்த கால்பந்துப் போட்டியானாலும் சரி, அதில் அட்லீஸ்ட் ஒரு கோலாவது போடாமல் மைதானத்தை விட்டுத் திரும்பியது கிடையாது, தமிழ்நாட்டின் முன்னணி கால்பந்து வீராங்கனையான பத்மாவதி.

ஆனால், என்ன புண்ணியம்? தன் கனவுகளையெல்லாம் புதைகுழியில் புதைத்துவிடப் போகிறார் இந்த தமிழ்நாட்டின் லேடி பெக்கம். அதற்கான காரணங்களை குமுறலோடு நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்...

“எட்டாவதிலிருந்து கால்பந்து விளையாடறேன். முதன்முறையா தமிழ்நாடு டீம் நேஷனல் லெவல்ல கால்இறுதி வரை போனதற்கு ஒரு பெரிய கருவியா இருந்திருக்கேன். என்ன உடல் வருத்தி என்ன பயன்? இதுவரை சாதித்த சாதனைகள் எதுவும் எனக்கு பணம், பொருள், புகழ் தந்தது கிடையாது. ஸ்போர்ட்ஸ் கோட்டாவுல டிகிரி முடிச்சாலும், கல்லூரிகளில் வாங்கும் ஃபீஸில் எவ்விதச் சலுகையும் கிடையாது. வீட்டு ஷெல்ஃபில் காட்சியளிக்கும் பெரிய பெரிய ட்ராபிகளைத் தவிர, ஃபுட்பாலால நிறைய பணத்தையும் காலத்தையும் செலவு பண்ணிட்டேனோன்னுதான் இப்போ நினைக்கத் தோணுது”

**கிரிக்கெட், கால்பந்தை முடக்கிவிட்டதா?**

“கிரிக்கெட் அளவுக்கு கால்பந்துக்கு ஆதரவும் ஸ்பான்ஸர்ஷிப்பும் கிடையாது. சிலசமயம் எங்க கோச்சுகள்கூட உற்சாகம் இழந்திருவாங்க. இதுவரைக்கும் தமிழ்நாட்டிலிருந்து யாராலும் நேஷனல் டீம்ல செலக்ட் ஆக முடியலை. அங்க அத்தனை மேட்ச் ஃபிக்ஸிங் நடக்கறதா சொல்றாங்க. இவ்வளவு பாலிடிக்ஸ், பிரச்னைகள் இருக்கிறதாலதான் உலகக் கோப்பை என்ன, அதோட தகுதிச் சுற்றுப் போட்டியில கலந்துக்கக் கூட நாம தடுமாறிட்டு இருக்கோம்.”

**அப்போ கால்பந்துக்கு முற்றுப்புள்ளிதானா?**

“யோசிக்கிறேன். எனக்காக அப்பா நிறைய செலவு செஞ்சிருக்கார். ஒய்.எம்.சி.ஏ கல்லூரியில பிஸிகல் எஜுகேஷன் முடிச்சதால, ஒழுங்கா பி.டி டீச்சர் வேலைக்குப் போய் இனிமேலாவது குடும்பத்துக்கு தோள் கொடுக்கலாம்னு பார்க்கறேன். இந்தியன் ரெயில்வே, வங்கிகள், அரசு நிறுவனங்கள் இதிலெல்லாம் கால்பந்து வீராங்கனைகளுக்கு வேலை தருவதே கிடையாது.

வேறு மாநிலத்திலோ, வெளி நாட்டிலோ பிறந்திருந்தால், ஒரு வேளை என் கனவு நிறைவேறியிருக்கலாம். ம்ஹூம்... எனக்கு விதிக்கப்பட்டது அவ்வளவுதான் போல.”

- சநகன்

தமிழால் தினமொரு செய்தியில் அடிபடும் டாக்டர் ராமதாஸிடம் தமிழ் குறித்த சில கேள்விகளை முன் வைத்தோம்...

# "திரைப்படங்கள் பற்றி என்னிடம் கேட்காதீர்கள்!"

# RAMA

# "ஆங்கிலத்தில் பேசுங்க!"

## -ராமதாஸ் அட்வைஸ்

**தமிழ் மீது உங்களுக்கு இத்தனை ஆர்வம் ஏற்பட அடிப்படையாக அமைந்தது எது?**

"நாட்டுப்புறப் பாடல்கள்தான். இளம் வயதில் என் கிராமத்தின் வயல் வெளிகளிலும், பிற இடங்களிலும் நான் கேட்டுணர்ந்த தூய நாட்டுப் பாடல்களும், ஒப்பாரிப் பாடல்களும்தான் தமிழ் மீதான என் அளவு கடந்த ஆர்வத்திற்கு உரம் போட்டவை. அதேபோல் நான் படித்த பள்ளியின் தமிழாசிரியர்களான புலவர் மாரிமுத்து, புலவர் சீனிவாசன் இருவரும் தான் தமிழைப் பொறுத்தவரை எனது குருநாதர்கள். மாரிமுத்து காலமாகிவிட்டார். இவர்கள் இருவரும் என்னை மிகவும் ஊக்கப்படுத்துவார்கள். பள்ளி நாட்களில் புத்தகம் வாங்கக் கூட பணமில்லாத வறுமை நிலையில் நான் படித்ததுண்டு. அப்போதெல்லாம் தங்களது கைப்பிரதியை எனக்குக் கொடுத்து, என்னைப் படிக்க வைத்தவர்கள் இவர்கள். இன்றைக்கு தமிழுக்காக நான் போராடுவதைப் பார்க்கும்போது சீனிவாசன் அவர்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சி."

**திரைப்படங்களில் தமிழை வலியுறுத்தி இனி போராடப் போவதில்லை என்று முடிவெடுத்து விட்டது ஏன்?**

"மீண்டும் மீண்டும் திரைப்படம் பற்றி என்னிடம் கேட்காதீர்கள். நான் ஏதாவது கூறப் போய், அதைச் செய்தியாக்கி... எதற்கு வீண் பிரச்னை? நான் அதற்கு எந்த முக்கி

## 'சிரஞ்சீவி' விஜய்!

தமிழ்நாடு மெர்க்கன்டைல் வங்கி, தமிழ்ப் புத்தாண்டு




பரிசாக 'சிரஞ்சிவி ரெக்கரிங் டெபாசிட்' என்கிற புதிய திட்டத்தை அறிமுகப்படுத்தியிருக்கிறது.

நடிகர் விஜய் அறிமுகப்படுத்திய இத்திட்டம் பற்றி கேட்டபோது,

"வழக்கமான ரெக்கரிங் டெபாசிட் தான். ஆனால் இதில் கூடுதலாக டெபாசிட்டின் முதிர்வுத் தொகைக்கு (Maturity Amount) இணையாக இன்ஷூரன்ஸ் செய்து கொள்ளலாம். இதற்காக AMP சன்மார் இன்ஷூரன்ஸ் நிறுவனத்தோடு கை கோத்துள்ளோம். இதன்மூலம் நாலாயிரம் முதல் பத்து லட்ச ரூபாய் வரை இன்ஷூர் செய்து கொள்ளலாம். மேலும் முதிர்வுத்

யத்துவமும் கொடுக்க விரும்பவில்லை."

**உங்களின் அடுத்த இலக்கு பத்திரிகைகளா?**

"பத்திரிகைகள் பெயர் வைப்பதிலேயே



பாதி தமிழ், பாதி ஆங்கிலப் போக்கை கடைப்பிடிக்கின்றன. முழுவதும் தமிழாக வைத்தால் ஏற்றுக் கொள்ளலாம். இன்றைக்கு தின, வாரப் பத்திரிகைகளில் பிறமொழி வார்த்தைகளைப் பார்க்கும்போது, கொடுக்கப்படும் ஆங்கிலம் கலந்த தலைப்புகளைப் பார்க்கும்போது, தமிழை ஒரு கலப்பட மொழியாக்க முயற்சிக்கிறார்களோ என்கிற சந்தேகம் வருகிறது. பெரும்பாலான பத்திரிகைகள் இன்றைக்கு இப்படித்தான் இருக்கின்றன. இவர்களுடன் திரைத்துறை, தொலைக்காட்சி, வானொலி எல்லாருமாகச் சேர்ந்து, தமிழைத் தொலைப்பதுதான் எங்களுக்கு வேலை; தமிழை அழிப்பதுதான் எங்களுக்கு வேலை என்று திட்டம் போட்டுச் செயல்படுகிறார்களோ எனத் தமிழை நேசிக்கிறவர்களை எண்ண வைக்கிறது."

**ஆங்கிலமே வேண்டாம்... தமிழ் மட்டும் போதும் என்கிறீர்களா?**

"ஆங்கிலத்தில் பேசுங்க. ஆனால் தமிழை ஒரு வார்த்தை கூட அதில் கலக்கக் கூடாது. ஆங்கிலம் ரொம்ப முக்கியமான மொழி. பத்து, பன்னிரண்டாம் வகுப்பு படிப்பதற்குள் ஆங்கிலத்தில் சிறப்பாகப் பேச, எழுத பயிற்சி கொடுக்கப்பட வேண்டும். மூன்றாம் வகுப்பிலிருந்து, அல்லது ஆறாம் வகுப்பிலிருந்து அல்லது மொழி வல்லுநர்கள் சொல்லும் வகுப்பிலிருந்து தொடங்கி, பன்னிரண்டாம் வகுப்பு வரை ஆங்கிலத்தை நாம் சிறப்பாகக் கற்றுக் கொடுக்க முடியும். அதே நேரம் மற்ற பாடங்களெல்லாம் தமிழில் இருக்க வேண்டும்."

**- மு.மாறன்**

படம் : **ராஜன்**

---

தொகை மற்றும் இன்ஷூரன்ஸ் இரண்டிற்குமே நாமினியை வைத்துக்கொள்ள பாலிசிதாரருக்கு உரிமை உண்டு" என்றார் வங்கியின் இயக்குனர் ராமச்சந்திர ஆதித்தன்.

"இதன்படி குறைந்தபட்ச மாதாந்திர முதலீடு, நூறு ரூபாயிலிருந்து துவங்குகிறது. குறைந்தபட்சம் மூன்று வருடங்கள் முதல் ஏழு வருடங்கள் வரை முதலீடு செய்யலாம். இதற்கான வயது வரம்பு 18 வயதுக்கு மேலும், 55 வயதுக்குக் கீழும் என்று நிர்ணயித்துள்ளோம்.

எதிர்பாராதவிதமாக பாலிசிதாரர் இறக்க நேரிட்டால் இன்ஷூரன்ஸ் தொகையும், அவரால் முதலீடு செய்யப்பட்ட தொகையும், அதற்குண்டான வட்டியுடன் சேர்த்து அவருடைய நாமினி வசம் தரப்படும். ஒருவேளை பாலிசிதாரர் விபத்தினால் இறந்தால், மேற்கண்ட தொகையுடன் மேலும் ஒரு பங்கு இன்ஷூரன்ஸ் தொகை சேர்க்கப்பட்டு அளிக்கப்படும். இந்த வாய்ப்பு பாலிசிதாரர் ஒரு மாதம் மட்டுமே தவணை செலுத்தியிருந்தாலும் உண்டு" என்றார் வங்கியின் சேர்மன் ராதாகிருஷ்ணன்.

இறப்பிற்குப் பிறகு கிடைக்கும் முதிர்வுத் தொகை மீதோ, கிடைக்கும் வட்டியின் மீதோ வருமானவரி பிடித்தம் கிடையாதாம்.

**- முத்து**



# அருள்வாக்கு

கோயில் உண்டி வாயிலே மெக்கானிக்கலாகப் பணத்தைப் போடுவது பெரிசில்லை. அதுவும் இப்போது இருக்கிற inflationல் எவரும் ஏதோ கொஞ்சம் உண்டியில் போட்டுவிட்டுப் போய்விடலாம். அதுவும் பண்ண வேண்டியதுதான். ஆனாலும் இப்படி மெக்கானிக்கலாக உண்டி வாயில் போடுவதைவிட, ஒரு செலவும் நமக்கு இல்லாமலே கறிகாய்த் தோலிகளை நேரே உயிருள்ள ஒரு பசு வாய்க்குப் போட்டு, அது



தின்பதைப் பார்த்தால், இதில் நமக்குக் கிடைக்கிற உள்ள நிறைவே அலாதி என்று தெரியும். ஸேவையிலே இதுதான் முக்யமான அம்சம். அதில் பணமும் உழைப்பும் பேசுவதைவிட ஜீவனோடு ஜீவன் பேச வேண்டும். ஸேவை செய்கிறவர்கள் ஸங்கமாக ஒன்று கூடும்போது இப்படி உயிர்த் தொடர்பு ஏற்படுவது மட்டுமின்றி, ஸேவைக்குப் பாத்திரமாகிறவர்களையும் நேரே தங்களோடு தொடர்புபடுத்திக் கொள்ள வேண்டும். ஒரே ஈச்வரன்தானே இத்தனை ஜீவன்களுமாகியிருப்பது? ஜீவலோகத்துக்குச் சொரிகிற அன்பினால், ஸேவையால், அந்த ஈச்வரத்வத்தை அநுபவித்து அவனுக்கு வழிபாடாகவே இதைச் செய்வதுதான் ஸேவையின் ஸாரம்.

கறவை நின்ற மாடுகளை அடிமாட்டுக்காக விற்காமல், ஜீவிய காலம்வரை அவற்றைக் காப்பாற்ற வழிசெய்ய வேண்டியது நம் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை - தாயாருக்குச் செய்ய வேண்டிய கடமைக்கு ஸமதையான கடமை. பகவத் ஸ்ருஷ்டியிலேயே தன் கன்றுக்கு வேண்டியதைவிட, உபரியாக மற்றவர்களுக்கென்றும் பாலைச் சுரக்கிற பசு நமக்கெல்லாம் தாயார்தான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# சாரும்...

## எம். அசோகன்

குருமூர்த்தி ஏழு மணிக்கு பணம் தருவதாகக் கூறியிருந்தான். எப்போதும் மாலையில்தான் அவன் பட்டுவாடா. அதுவும் டயர் வாங்கிய தினமே பணம் தருகிறேன் என்று ஒப்புக் கொண்டிருப்பதே பெரிய விஷயம். ஒரு வாரம் பத்து நாள் என்று இழுத்தடித்து விடுவான். அதை ஒரு கொள்கையாகவே கடைப்பிடிப்பவன்.

டயர் வாங்கிய உடனே பணம் கொடுக்கக்கூடிய 'கேஸ்' கடைக்காரர்கள் பலர் இருந்தும், என்னைப் போன்ற 'சைக்கிள்' வியாபாரிகள் பலரும் அவனிடம்தான் நாங்கள் வாங்கி வரும் பழைய டயர்களை விற்போம். மற்றவர்களைவிட அதிக விலை கொடுப்பதுதான் காரணம். அவனும் அது தெரிந்தேதான் பணம் தாமதமாகக் கொடுக்கிறான்; அல்லது அதிக விலை கொடுத்து வாங்குகிறான். அவனது பொருளாதாரக் கொள்கை அப்படி.

சொன்னபடி கொடுத்து விடுவானா என்று பயமாக இருந்தது. பணத்திற்கு அவ்வளவு அவசரம். அதை வாங்கிக் கொண்டுதான் காவடிக்கு பழநிக்குப் போக வேண்டும். பங்குனி உத்திர தீர்த்தக் காவடி. போகாவிட்டால் ஒன்றும் குடி முழுகிப் போய்விடாதுதான். கவுரவப் பிரச்னை. சொந்த பந்தங்களெல்லாம் அய்யாவையும் அம்மாவையும் கேள்விகளால் துளைத்து விடுவார்கள்.

அவமானப்பட்டுப் போவார்கள் பெற்றவர்கள். அதனால்தான் வருடந்தவறாமல் அய்யா 'கட்டாயம் காவடிக்கு வந்துவிடு' என்று இரண்டு மூன்று கடிதங்கள் எழுதிவிடுவார். திண்டுக்கல்லிலிருந்து பெங்களூருக்கு பிழைக்க வந்த கடந்த பத்து வருடங்களாக இதுதான் வழக்கம். சோற்றுக்கு இருக்கிறதோ இல்லையோ, காவடிக்கு வந்துவிட வேண்டும்.

கொள்ளுத் தாத்தா, தாத்தா காலத்திலிருந்து ஐம்பது வருடங்களுக்கும் மேலாக காவடி எடுத்து வருகிறார்கள் முன்னோர்கள். அய்யா தொடர்கிறார். வர்த்தகர்களாதலால் குடும்பப் பொருளாதார நிலைமை ஒரே சீராக இருக்காது. திடீரென்று வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும். திடீரென்று சுண்டிப்போய் வறண்ட பாலையாகி விடும். ஆனால் மழை பொய்த்தாலும் காவடி எடுப்பது பொய்க்காது. கடன்பட்டாவது அது நடக்கும். இல்லையென்றால் காவடிக்குக்கூட வர முடியாத அளவுக்கு பணக்கஷ்டத்தில் இருக்கிறார்கள் என்று பேசுவார்களே!

பழநிக்குப் போய் வர பஸ் செலவு மற்ற இதர செலவுகளுக்குக் குறைந்தது ஐந்நூறு ரூபாயாவது வேண்டும். என்ன செய்வது என்று தெரியாமல் இன்று காலை வரை மயங்கிக் கொண்டிருந்தேன்.

யாரிடமாவது கடன் வாங்கிக் கொண்டு போகலாம். ஆனால் திரும்பி வந்தபின் எப்படி அதைத் தீர்ப்பது?

நேற்று இரவெல்லாம் தூக்கம் வரவேயில்லை.

விடிந்ததும், பங்களா பங்களாவாகச் சுற்றி டயர் ஏதாவது வாங்கினால்தான் உண்டு. அதுவும் குறைந்தது ஐந்நூறு ரூபாய் லாபம் கிடைக்கிற மாதிரி டயர்கள் வாங்க வேண்டும் என்று நினைத்தேன். சதாசிவ நகரில் இரண்டு பேர் வரச் சொல்லியிருந்தார்கள். இந்த நினைப்பு வந்ததும், எப்போதடா விடியும் என்ற தவிப்பு தொற்றிக் கொண்டது.

**வி**டிந்தும் விடியாமல் சைக்கிளை எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். வரச் சொன்ன இருவரில், முதலாவதாகப் பார்த்தவனிடத்திலேயே டயர்கள் கிடைத்தன. ஆனால் அதை வாங்குவதற்குள் பட்ட பாடு இருக்கிறதே...

பெரிய பங்களா.

“சார், சார்” என்று பிச்சைக்காரனைப் போல் பலமுறை கூவிய பின்பு, கண்களைக் கசக்கியவாறே கதவைத் திறந்து “யாரு?” என்றான்.

“பழைய டயர்...” என்று கன்னடத்தில் கத்தினேன். ஏதோ முனகினான். ‘காலங் காத்தால என்ன எழவுடா, இது’ என்றிருக்கலாம்.

‘இரு’ என்று சைகை காட்டிவிட்டு உள்ளே போனான். பத்து நிமிடங்கள் கழித்து திரும்பி வந்தான். அதுவரை மனம் படபடத்

# சாமியும்!



துக்கொண்டிருந்தது. எத்தனை டயர் இருக்குமோ, என்ன விலை சொல்வானோ என்று தவித்தது.

கார் ஷெட்டைத் திறந்து மூலையில் ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கியிருந்த டயர்களைக் காண்பித்தான். படபடப்பு அதிகமானது. நடுங்கும் கைகளுடன் ஒவ்வொன்றாய் இறக்கிப் பார்த்தேன். அடிபட்டிருக்கிறதா, பீடிங் ஒடிந்திருக்கிறதா, ஃபிளை தேய்ந்திருக்கிறதா என்று பார்த்தேன். ஆறு டயரும் லட்டு மாதிரி இருந்தன. எல்லாம் அம்பாஸிடர் காரின் டயர். டிமாண்ட் சைஸ். ஆயிரம் ரூபாய்க்கு விற்கும். “எஸ்டு கொடு பேக்கு சார்?” என்று அவன் முகத்தைப் பார்த்தேன்.

அவன் என்ன விலை சொன்னாலும் என்னிடம் கொடுப்பதற்கு இருநூறு ரூபாய்க்கு மேல் இல்லை. அவன் வாய் திறக்கும் முன், எனக்கு வயிற்றைப் பிசைந்தது. எச்சிலை முழுங்கிக் கொண்டேன்.

“எஸ்டு கொடுத்தியா?” என்று அவன் என்னையே கேட்டான்.

ஒரு கணம் என்ன சொல்வதென்றே தெரியவில்லை. நூறு எனலாமா, நூற்றைம்

பது எனலாமா? ரொம்பவும் குறைவாகக் கேட்டால், டயர் கொடுப்பதில்லை என்று விரட்டி விட்டால் என்ன செய்வது? சில முன் அனுபவங்கள் பயமுறுத்தின. பணக் காரர்களுக்கு நூறு, இருநூறெல்லாம் ஒரு தொகையா? பிச்சைக்காசு. டயர்களைப் பார்த்த வண்ணம் யோசிப்பதுபோல் பாவனை செய்தேன்.

"ஜல்தி ஹேளப்பா" என்றான்.

"நீவே ஹேளி சார்" என்றேன். எதற்கு ரிஸ்க்?

"ம்... முந்நூறு கொடப்பா" என்றான். எனக்கு பழநி கண்ணுக்குத் தெரிய ஆரம் பித்தது.

"அவ்வளவுக்கெல்லாம் விற்காது. நூற்றி இருபத்தைந்து தருகிறேன்" என்றேன். ஒரே வார்த்தையில் "தர முடியாது" என்று சொல்லி விட்டான். "டயர்களை பழையபடி அடுக்கி வைத்துவிட்டுப் போ" என்று சொல்லிவிட்டு ஷெட்டுக்கு வெளியே போய் நின்றுகொண்டான். பயந்த மாதிரியே ஆகிவிட்டது. ஆயிரம் ரூபாய் டயருக்கு முந்நூறு கொடுக்கலாம்தான். கசக்குமா என்ன? ஆனால் கையிலி ருப்பதோ வெறும் இருநூறுதானே!

வாய்ப்பு நழுவிவிட்டதோ என்று கண்கள் கலங்கிவிட்டன. அவனைக் கெஞ்சினேன். முதுகு தானாகக் கூனி விட்டது. கைகள் யாசிப்பது போன்ற நிலைக்கு வந்துவிட்டன. குரல் கம்மி விட்டது. கரகரத்தது. "நூற்றி ஐம்பது தருகிறேன்" என்றேன். "என்னப்பா உன்னோட ஒரே நியூசென்சாப் போச்சு" என்று, 'போபோ' என்பது போல் கையை வீசினான். "ஒரு வாரமாக வியாபாரமே இல்லை, கொடுத்தால் ஒரு ஐம்பது ரூபாய் கிடைக்கும்" என்ற வார்த்தைகளுக் கிடையே பல 'சார்'கள் போட்டு கூனிக் குறுகினேன். "இருநூறு ரூபாய் கொடு. இல்லையென்றால் வெளியே போ" என்று சொல்லிவிட்டு அவன் வீட்டை நோக்கித் திரும்பினான். டக்கென்று பணத்தை எடுத்துக் கொடுத்துவிட்டு, டயர்களைத் தள்ளிக்கொண்டு பங்களாவை விட்டு ஓடி வந்தேன்.

குருமூர்த்தி முதலில் பணத் துக்கு ஆறு மணிக்கு வரச் சொன்னான். அந்நேரம் கடைக்குப் போனபோது அவன் இல்லை. திடுக்கென்றிருந்தது. பட்டுவாடா செய்ய கையில் பணமில்லையென்றால், சினிமாவுக்குப் போய்விடுவான். அப்புறம் மறுநாள்தான். இன்றும் அப்படிச் செய்து விட்டானோ என்று பயமாக இருந்தது. ஆனால் 'ஏழு மணிக்கு வந்து விடுவான்' என்று கடைப்பையன் சொன்னான். பணம் கொடுத்து விடுவான் என்ற நம்பிக்கையில், ஊருக்குப் போக பையுடன் வந்து விட்டிருந் தேன். பணத்தை வாங்கிக் கொண்டு பஸ் ஏற வேண்டும். தவிப்புடன் கடை வாசலிலேயே காத்துக் கிடந்தேன்.

ஒரு வழியாக எட்டரை மணிக்கு வந் தான். "பணமெல்லாம் இன்னிக்கி இல்ல" என்று கேலியாகச் சிரித்துக் கொண்டே கூறினான். முகத்தை உற்றுப் பார்த்துச் சிரித்தான்.

> **கண்கள் கலங்கிவிட்டன.**
> **அவனைக் கெஞ்சினேன்.**
> **யாசிக்கும் நிலைக்கு**
> **கைகள் வந்துவிட்டன.**



"குருமூர்த்தி, வெளாடாத... ஊருக் குப் போகணும்" யாசித்தேன். என்ன செய்வது? என் பணத்திற்கே யாசிக்க வேண்டிய நிலைமை.

மீண்டும் சிரித்துக் கொண்டே ஐந்நூறு ரூபாயை எடுத்துக் கொடுத்தான். "மீதி ஊரிலிருந்து வந்தபின் வாங்கிக் கொள்" என்றான்.

உடலையும் மனதையும் அழுத்திக் கொண்டிருந்த பாரம் சட்டென்று விலகியது.

காவடி தங்கியிருக்கும் மண்டபத்தில் என்னைப் பார்த்ததும், பெற்றோரின் முகம் மலர்ந்தது. எப்போது வந்தாய், ஏன் இவ்வளவு லேட், வியாபாரம் எப்படி இருக் கிறது என்று விசாரித்தனர். சொந்தங்களும் அப்படியே விசாரித்தன. உண்மையான அன்பும், ஏளனப் பார்வைகளும், ஆளை எடை போடும் ஊடுருவல் பார்வைகளும் அவ்விசாரிப்புகளில் இருந்தன.

எல்லோரும் காவடி செலுத்தச் செல்வதற்காக (தீர்த்தாபிஷேகம்) மலையேறத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். குழந்தைகளும் பெண்களும் கல்யாண வீட்டுக்கு வந்ததுபோல் ஜொலித்துக் கொண்டிருந்தார்கள். கல்யாண நிகழ்ச்சிகளைப் போல, காவடியும் அந்தஸ்தை வெளிப்படுத்திக் கொள்ளும் நிகழ்வாகி விட்டது. இங்கு வருவதற்காக பணத்துக்குப் பட்டபாடு நினைவிற்கு வந்து, சகஜமாக எல்லோருடனும் சேர்ந்து கலக்க விடாமல் தடுத்தது.

"பஞ்சாமிர்தத்துக்கு எழுபத்தஞ்சு ரூவா வேணும். பணம் கொண்டாந்திருக்கியா?" அம்மா கேட்டாள்.

பேண்ட் கட் பாக்கெட்டிலிருந்து எடுத்துக் கொடுத்தேன். இதைப் பார்த்துக் கொண்டிருந்து வந்தார்களா அல்லது எதேச்சையாக வந்தார்களா என்று தெரியவில்லை.



எப்படியிருந்தாலும் வருகிறவர்கள்தான். கூலிக்காகக் காவடியை ஊரிலிருந்து கொடுமுடிக்கும், கொடுமுடியிலிருந்து பழனிக்கும் சுமந்து வருகிற ஊர் சேரிக்காரர்கள். ஒரு வாரம் மூன்று வேளையும் சாப்பாடு, ஒரு காவி வேட்டி, பனியன், துண்டு மற்றும் முந்நூறு ரூபாய் கூலி. இதன்றி டீ சாப்பிட என்று ஐந்தும் பத்துமாக அவ்வப்போது வாங்கிக் கொள்வார்கள். மொத்தமாக ஐந்நூறு தேற்றி விடுவார்கள்.

இரண்டு பேர் வந்தார்கள். "இவன் நம்ம காவடிக்காரன், இவன் உங்க சித்தப்பா காவடிக்காரன்" என்று சொல்லிவிட்டு அம்மா போய்விட்டாள். போகும் போது 'ஒன்றும் கொடுக்காதே' என்பது போல் ஜாடை காட்டினாள்.

"சாமி, நல்லாருக்கீங்களா?"

ஐம்பது வயதிருக்கும். துண்டு இடுப்பிலிருந்தது. கை கட்டிக் கொண்டு பவ்யமாகக் கேட்டார்.

"நல்லா இருக்கேங்க"

அவர் வயது கருதி என் சொல்லில் இருந்த மரியாதை, அவருக்கு அதிசயமாக இருந்திருக்க வேண்டும் என்பது முகத்தில் தெரிந்தது.

வீட்டுக்குள்ளும், கோயிலுக்குள்ளும் விட மாட்டார்கள். தீண்ட மாட்டார்கள். தீட்டு என்பார்கள். ஒருமையில் இகழ்வார்கள். ஆனால் நூற்றி ஐம்பது மைல் காவடி கவசத்தைத் தூக்கிக் கொண்டு வருவதற்கு மட்டும் இவர்கள் வேண்டும்! இது என்ன தர்மமோ?

அதுவும் பழநி வரைக்கும்தான். மலை மேல் அவரவர் காவடிகளை அவரவரே தூக்கிச் செல்வார்கள். கூலிக்காரர்களெல்லாம் கீழேயே இருக்க வேண்டியதுதான்.

"சாமி, டீ செலவுக்கு..." என்று இழுத்தார்.

பணத்தை எண்ணி எண்ணி செலவு செய்து கொண்டிருந்தேன். அவருக்குத் தெரியுமா என் கஷ்டம்? சொன்னால்தான் நம்புவாரா?

"அய்யாகிட்ட வாங்கியிருப்பீங்கல்ல?" தப்பிக்க முயன்றேன். அவர் விடவில்லை.

"இல்ல சாமி. எதோ குடுத்தீங்கன்னா ரெண்டு நாளைக்கி வீட்ல எல்லோரும் கஞ்சி குடிச்சுக்குவோம் சாமி" என்று கைகளை நீட்டி யாசித்தார். பங்களாக்காரனிடம் டயர் வாங்கும்போது நான் யாசித்தது நினைவுக்கு வந்தது.

நான் 'சார்' என்றேன். இவர் 'சாமி' என்கிறார்.

ஆளுக்கு இருபது ரூபாய் கொடுத்தேன். "நல்லாருங்க சாமி" என்று வாழ்த்தி விட்டுப் போனார்கள். என் நிலைமைக்கும் அவர்கள் நிலைமைக்கும் என்ன வித்தியாசம்? பாழாய்ப் போன சாதியைத் தவிர? இதில் மேலென்ன கீழென்ன வேண்டிக் கிடக்கிறது? ○




# கூவத்தில் துவைக்கலாமா?

சைதாப்பேட்டை மறைமலை அடிகள் பாலத்தைக் கடப்பவர்கள், நிச்சயம் அந்தக் காட்சியை பார்க்கத் தவறியிருக்க மாட்டார்கள். குட்டை குட்டையாய் ஆங்காங்கே தேங்கியிருக்கும் கூவம் நீரில் சலவைத் தொழிலாளிகள் துணிகளைத் துவைத்து, வெள்ளை வெளேரென்று காய வைத்துக் கொண்டிருப்பார்கள். 'நல்ல தண்ணீரில் துணி துவைப்பார்கள்' என்று நம்பிக்கையோடு சலவைக்குப் போடும் பொது மக்களை, சலவைத் தொழிலாளர்கள் இப்படி ஏமாற்றலாமா?

> **"எங்களுக்கு மட்டும் துணி துவைக்கணும்னு வேண்டுதலா என்ன?"**

"இதுல ஏமாத்தறதுன்னு எதுவுமில்ல... எங்களுக்கு இந்தக் கூவம் தண்ணிய விட்டா வேற கதி கிடையாது. பல பேருக்கு நாங்க இங்க துணி துவைக்கறது தெரியும். சிலருக்கு வேணா தெரியாமலிருக்கலாம். ஒரு சிலர் விஷயம் தெரிஞ்சு துணி தராம இருந்து, கொஞ்ச நாள் கழிச்சு, வேற வழியில்லாம மறுபடி எங்ககிட்டயே திரும்ப வந்துட்டாங்க" என்றார் ராஜி. நெடுநாட்களாக கூவத்தில் துணி துவைத்து வரும் சலவைத் தொழிலாளி.

கூவத்தின் தன்மை பற்றி ஊரே அறியும். அப்படியிருக்க எப்படி வெள்ளை வெளேரென்று இவர்களால் துணிகளைத் துவைக்க முடிகிறது?

"கூவம் தண்ணி நாத்தம், அழுக்கு தான். ஆனா நாங்க ப்ளீச்சிங் பவுடர், சோடா உப்பு, காஸ்டிக்னு மூணு கெமிக்கலை தண்ணியில கலந்து, அந்தத் தண்ணியில குறைஞ்சது பத்து





• அப்துல்



மணி நேரமாவது ஊற வச்சித்தான் துணிகளைத் துவைக்கிறோம். கூவத்துல துவைச்சப்புறம் மெட்ரோ வாட்டர்லயும் ஒரு அலசு அலசித்தான் காய வைக்கிறோம். அதனால நாத்தும், அழுக்கில்லாம துணி வெள்ளை வெளேர்னு இருக்கு'' என்றார் இன்னொரு சலவைத் தொழிலாளியான அப்துல்.

**கூவத்தில் இறங்கி துணி துவைப்பதால் நோய்கள் தாக்கும் அபாயமிருக்கிறதே?**





* இணி அலகசம் ராஜி

''கூவத்துல வீட்டுக் கழிவுகள், மனிதக் கழிவுகள், மாமிசக் கழிவுகள்னு எல்லாமே கலக்கறதால தோல் வியாதிங்க வரத்தான் செய்யுது. அப்பல்லாம் தொழிலுக்குப் போக மாட்டோம். ரெண்டு மூணு வாரத்துக்கு பொழைப்புல மண்ணு விழுந்துடும். இதனால எங்களுக்கு நஷ்டம்தான். இருந்தாலும் எங்களால யாருக்கும் எந்த நோயும் வந்துடக்கூடாதுங்கற பொறுப்பு எங்களுக்கு இருக்கறதால கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்துதான் போக வேண்டியிருக்கு. இந்த அளவுக்கு மோசமான இடத்துல துணி துவைக்கணும்னு எங்களுக்கு மட்டும் வேண்டுதலா என்ன? நல்ல தண்ணி கிடைக்க மாட்டேங்குது. இதுல துவைக்கிறோம். அரசாங்கம் எங்களை மாதிரி தொழிலாளர்கள் மேலயும் கருணை காட்டினா, நாங்க இந்த நாத்தத்தை விட்டு விலகத்தான் போறோம்'' என்றனர்.

**- கலை**

"...ஜெயகாந்தன் கடந்த கால் நூற்றாண்டாக குறிப்பிடும்படியாக எதையும் எழுதவில்லை. அவருடைய பல அரசியல், சமூகக் கருத்துகள் சகிக்க முடியாதவை. அவருடைய கதைகளின் வடிவம் மற்றும் அழகியல், பல்வேறு பலவீனங்களைக் கொண்டவை..." - 'உயிர்மை' இதழில் ஜெயகாந்தனை வாழ்த்திய கவிஞர் மனுஷ்ய புத்திரன், கூடவே இப்படி ஒரு விமர்சனக் குட்டும் வைத்துள்ளார்! சக எழுத்தாளர்கள் இது குறித்து என்ன நினைக்கிறார்கள்?

**அசோகமித்திரன் :**

ஜெயகாந்தனின் இலக்கியச் செல்வாக்கையும், பிற எழுத்தாளர்கள் மீதான அவரது பாதிப்பையும் நினைத்துப் பார்க்க வேண்டும். கிட்டத்தட்ட 20, 25 வருடங்களாக, தமிழ் இலக்கிய உலகத்தில் அவர் இயங்கி வந்திருக்கிறார். இன்றைய நவீன எழுத்தாளர்களிடம் கூட ஜெயகாந்தனின் பாதிப்பு இருக்கவே செய்கிறது. இவ்வாறிருக்க, ஜெயகாந்தனுக்குக் கிடைத்திருக்கிற ஞானபீட விருதினால் நாம் அனைவரும் மகிழ்ச்சியடைய வேண்டும். அதுதான் சரி.

அப்படியானால் அவரது படைப்புகள் மீது விமர்சனம் செய்யவே கூடாதா? அவரது பங்களிப்பைப் பற்றி விவாதிக்கக் கூடாதா? கட்டாயம் செய்யலாம். ஆனால், அதற்கான சமயம் இதுவல்ல. அவருக்கு அளிக்கப்பட்டுள்ள விருது ஒரு முக்கிய சமூக நிகழ்வு. இது ஒரு திருமணம் போல. இந்தச் சமயத்தில் நாம் அவரை வாழ்த்துவதுதான் சரியான செயல். இந்த மகிழ்ச்சியான சமயத்தில், 'மாப்பிள்ளையின் சுண்டு விரல் சரியல்ல' போன்ற விமர்சனங்களால் எந்த விதப் பயனும் கிடையாது.

# ஜெயகாந்தனை இகழலாமா?




**திருப்பூர் கிருஷ்ணன் :**

ஓர் எழுத்தை நாம் புரிந்துகொள்ளும் விதத்தில் வேண்டுமென்றே இட்டுக்கட்டி தாக்குவதென்றால், எவ்வளவு வேண்டுமென்றாலும் தாக்கலாம். தமிழில் வெளிவந்த நாவல்களில் ஜெயகாந்தனின் 'ஒரு மனிதன், ஒரு வீடு, ஒரு உலகம்' குறிப்பாகச் சொல்லப்பட



**"குற்றம் கண்டுபிடித்து விளம்பரம் தேடவே பலர் இங்கு செயல்படுகிறார்கள்"**

வேண்டியது. சிறுகதை, கட்டுரை, நாவல் என்ற மூன்று துறைகளிலும் சாதனை படைத்தவர் ஜெயகாந்தன். அவரது அரசியல், சமூகக் கருத்துகள் ஒரு சிலருக்கு உவப்பு இல்லாததாக இருக்கலாம். ஒரு எழுத்தாளரின் அரசியல் நிலைப்பாட்டை எல்லாக் காலத்திலும் எல்லோரும் ஏற்றுக் கொள்ள முடியும் என்று சொல்ல முடியாது. படைப்பிலக்கியத் துறையில் அவர் மாபெரும் சாதனையாளர் என்பது நிரூபிக்கப்பட்ட உண்மை. அவர் எழுதியதற்குத்தான் இந்த விருது. இப்பொழுதும் எழுதிக் கொண்டிருக்கிறாரா போன்ற வாதம் தேவையற்றது.

**இரா. முருகன் :**

**ந**ல்ல வேளையாக எம்.டி. வாசுதேவன் நாயரும், காப்ரியல் மார்க்வேஸூம் தமிழர்களாகப் பிறக்கவில்லை. ஒருவேளை அப்படி அவர்கள் பிறந்திருந்தால், இப்பொழுது கிடைத்திருக்கக் கூடிய அங்கீகாரம் கிடைத்திருக்குமா என்பது சந்தேகமே. ஏனென்றால், எந்த விதத்தில் யாரிடம் என்ன குற்றம் கண்டு பிடிக்கலாம், குற்றம் கண்டுபிடித்து, எப்படித் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளலாம் என்கிற ரீதியில்தான் பலர் இங்கு செயல்பட்டு வருகிறார்கள்.

உறங்கிக் கிடந்த தமிழ் இலக்கியத்தை, கைப்பிடித்து எழுப்பி நிற்க வைத்து, ஒரு புதிய பாதையை வகுத்துக் கொடுத்தவர் ஜெயகாந்தன். அவருடைய 'ஒரு மனிதன், ஒரு வீடு, ஒரு உலகம்' புத்தகத்திற்கு மட்டுமே ஒரு நோபல் பரிசைக் கொடுக்கலாம். என்னைக் கேட்டால், இது காலம் தாழ்ந்து அவருக்குக் கிடைத்திருக்கிற அங்கீகாரம் என்றுதான் சொல்வேன்.

**பாரதிபாலன் :**

**ம**னுஷ்யபுத்திரன் கூறியது எப்படி விமர்சனமாகும்? அவரின் இலக்கியக் கொள்கை என்ன? ஜெயகாந்தன் மீது அவர் தொடுக்கும் குற்றச்சாட்டுகளுக்கு என்ன ஆதாரங்களை சொல்கிறார்? ஒன்றுமேயில்லை. மேம்போக்காக ஏதேனும் ஒன்றைச் சொல்வதுதான் விமர்சனமா?

புத்தகங்களை வைத்து மட்டும்தான் ஓர் எழுத்தாளர் மதிப்பிடப்பட வேண்டுமா? ஜெயகாந்தனை எடுத்துக் கொண்டால் அவர் எப்பொழுதும் மக்களிடமிருந்து விலகியிருக்கவில்லை. அவர்களுடன் கலந்து அவர்களைப் பற்றித்தான் எழுதி வந்திருக்கிறார். அதிரடியாக, பிறரை வியக்க வைக்க வேண்டும் எனும் எண்ணத்துடன் மனுஷ்யபுத்திரன் போன்றோர் முன் வைக்கும் விமர்சனங்களால் பயன் ஏதுமில்லை.

**- மருதன்**

“ஒரு நடிகையின் மேனேஜராக செயல்படுவது லேசுப்பட்ட விஷயமல்ல. 'மாயாவி' படத்தில் வருவது போல் அப்பாவி நடிகைகளின் வாழ்க்கையையே சின்னாபின்னமாக்கிய மேனேஜர்களும் உண்டு. ஆனால், உண்மையிலேயே ஒரு தாய் தன் குழந்தையை அக்கறையாய் கரையேற்றுவது போல் தான், ஒரு நடிகையின் மேனேஜரும் செயல்பட வேண்டும்'' என்று கூறும் மனோஜ் கிருஷ்ணா, பூஜா, சந்தியா, நமீதா, மதுமிதா, தியா, தேஜஸ்ரீ, ஸ்ரீதேவிகா... என்று ஒரு டஜன் நடிகைகளின் மேனேஜர், காஸ்டிங்



• சந்தியா



• மனோஜ் கிருஷ்ணா

டைரக்டர்... இன்னும் சுருக்கமாகச் சொன்னால் இவர்கள் அனைவருக்குமான காட்ஃபாதராகச் செயல்பட்டுக் கொண்டிருப்பவர்.

தனது வளர்ந்த குழந்தைகளைப் பற்றி அறியாத பல விஷயங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டார்...



**பூஜா:** 'ஜே ஜே' படத்தில் அறிமுகமான இவர், 'அட்டகாசம்' படத்தில் நடித்து முடித்த பிறகே என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு அணுகினார். பொதுவாக நடிகைகளுக்கும் திரை உலகினருக்கும் சரியான தொடர்புகள் இருப்பது கிடையாது. நடிகை ஹாயாக வீட்டிலிருப்பார். ஆனால் அவரின் கால்ஷீட் ஒரு வருடத்துக்கு பிஸி என்று தவறான செய்திகள் பரப்பப்பட்டு, பின்னர் அதுவே நடிகையின் வாழ்க்கையை கேள்விக்குறியாக்கி விடும். இதே நிலைமைதான் பூஜாவுக்கும் ஏற்பட்டது. 'பூஜா ஆறு மாதம் பிஸி' என்று நியூஸ் பரப்பப்பட்டு, அவருக்கு 'தம்பி' பட சான்ஸ் முதல் பலதும் கிட்டாமல் போனது. பிறகு சரியாகப் பிடித்து வாங்கித் தந்தேன். ரொம்பவும் சிம்பிளான பெண்ணு. தற்பொழுது பெங்களூரில் வசித்தாலும், தனது தம்பியின் படிப்பு முடிந்த பிறகு செ
வார். மாதவனுடன் 'தம்பி', நாகார்ஜுனாவுடன்
தன், ஸ்ரீகாந்துடன் ஒரு படம் என்று தற்பொழு
கொண்டிருக்கிறார்.

# நடி

**நமீதா:** சூரத் நகரில் டெக்ஸ்டைல் பிஸினஸ்
சூரத்'தாகப் பட்டம் பெற்றவர். தெலுங்கு 'ஜெமினி
படங்கள் நடித்தும், அங்கு எந்த ஏற்றமும் இல்லாததால், தமிழுக்கு வந்தார். ஆரம்பத்தில் விஜயகாந்துக்கு ஜோடியாக 'எங்கள் அண்ணா'வில் நடிக்கத் தயங்கினார். அதன் பின்பு வரிசையாக சரத்குமார், சத்யராஜுடன் நடித்தபோது,



• மதுமிதா

எல்லோருமே இ
நடிக்கவே முடிய
ஆனால் இன்று
தடுத்து புக் ஆகி
மாநிலத்திலிருந்து
ஹோட்டலில் த
சம் வரை தயாரி
அதற்கு இடம்
அறிவுறுத்துவேண்
நுங்கம்பாக்கத்தில்

**மதுமிதா:**
ராமகிருஷ்ணா இ
பெரிதாக வர முடி



• தேஜஸ்ரீ

னயில் செட்டிலாகி விடு
; தெலுங்குப் படம், ஜித்
ஸ்டெடியாகப் போய்க்

சய்பவரின் மகள். 'மிஸ்
ல் நடித்தவருக்கு ஐந்தாறு

# கைகளின் காட்ஃபாதர்!

இளைய ஹீரோக்களுடன்
என்று பயமுறுத்தினார்கள்.
காந்த், பிரசாந்துடன் அடுத்
க்கிறார். பொதுவாக வெளி
வரும் நடிகைகள் ஸ்டார்
பதால், அதுவே மூன்று லட்
ளர் தலையில் வந்து விழும்.
டுக்காமல் வீடு எடுத்து தங்க
தன்படி நமீதா தற்பொழுது
னியாக வீடு எடுத்துள்ளார்.

தராபாத் பெண். கோடி
கத்தில் நடித்தும், தெலுங்கில்
வில்லை. 'குடைக்குள் மழை'

படத்தில் பார்த்திபனுடன் நடிப்பதில் சில தயக்கங்கள் இருந்தன இவருக்கு. பார்த்திபனும் வெகு சுலபத்தில் இவரைத் தேர்ந்தெடுக்கவில்லை. மூன்று தடவை சென்னைக்கு வரவழைத்து, பன்னிரண்டு நாட்கள் டெஸ்ட் வைத்துத்தான் ஓ.கே சொன்னார். தமிழில் முத்திரை பதிக்க வேண்டும் என்பதற்காகவே தமிழை நன்றாகக் கற்றுக் கொண்டார். தற்பொழுது 'இ3', 'அமுதே', 'இங்க்லீஷ்காரன்' படங்களில் நடித்து வருகிறார்.



• நமீதா

**தேஜஸ்ரீ:** தந்தை கதக் மாஸ்டர் என்பதால், இயல்பாகவே அதில் தேர்ச்சி பெற்ற மும்பை டான்ஸர். 'சென்னை சில்க்ஸ்'ன் முதல் விளம்பரத்தில் இவர்தான் நடித்தார். அப்பொழுது அவர் ஹோம்லியாகத் தோற்றமளிக்கவே 'தமிழ் சினிமாவில் நடிக்க



• பூஜா

முடியுமா?' என்று கேட்டேன். 'தமிழ் தெரியாதே' என்று மிகவும் தயங்கினார். உடனே ஒரு புத்தகம் வாங்கிக் கொடுத்து அனுப்பினேன். ஆறே மாதம், 75% தமிழில் பேசும் அளவுக்குத் தேறி விட்டார். 'ஒற்றன்' படத்தில் ஒரு பாடலுக்கு அர்ஜுனுடன் ஆடினார். 'போச்சு, இனி இவரால் ஹீரோயினாய் ஆகவே முடியாது'' என்றனர். ஆனால் 'மதுர'யில் மூன்று ஹீரோயின்களில் ஒருவராக, 'தகதிமிதா'வில் இரண்டு ஹீரோயின்களில் ஒருவராக நடித்தவர், படிப்படியாக முன்னேறி 'நீயே நிஜம்' படத்தில் முழு ஹீரோயினாகியிருக்கிறார்.

**சந்தியா:** கிருஷ்ணகிரி பள்ளியில் நானும் இவரது அம்மாவும் ஒன்றாகப் படித்தவர்கள். சந்தியா ஒன்பதாவது முடித்த சமயம், 'சினிமாவெல்லாம் வேண்டாம். அவர் அப்பாவுக்குப் பிடிக்காது. ஆனால் சந்தியா மாடலிங் செய்ய ஆசைப் படுகிறாள்' என்று அவர் அம்மா என்னிடம் சொன்னபோது, 'காதல்' படத்



துக்காக இயக்குனர் பாலாஜி சக்திவேல் ஒரு பள்ளி மாணவியை தேடிக் கொண்டிருந்தார். இதை மனத்தில் வைத்துக் கொண்டு, மாடலிங்குக்காக ஃபோட்டோ செஷன் எடுக்கும்போது பாவாடை, தாவணி காஸ்ட்யூமிலும் ஸ்டில்ஸ் எடுத்திருந்தோம். யாருக்கும் எதுவும் சொல்லாமல் என் சொந்த முயற்சியில், பாலாஜி சக்திவேலிடம் சென்று புகைப் படங்களைக் காண்பித்தேன். கண்கள் பளிச்சிட டெஸ்ட்டுக்கு வரச் சொன்னார். 'காதல்' படம் பற்றி சந்தியா அப்பாவிடம் 'மூச்' விடாமல் 'ச்சும்மா, மாடலிங் டெஸ்ட்' என்று கூறிவிட்டு, ஷங்கர் அலுவலகத்தில் சந்தியாவை டெஸ்ட் செய்தோம். பாலாஜி சக்திவேல் ஏகமனதாய் சந்தியாவை ஓ.கே செய்தார். அதன்பின்பு நடந்த விஷயங்களெல்லாம் சரித்திரம் ஆகிவிட்டன.

சிம்புவுடன் வல்லவன், சசி இயக்கத்தில் டிஷ்யூம், பரத், பிரசன்னாவுடன் புதிய படங்கள் என பார்த்துப் பார்த்து செய்கிறார்.

ஒரு நடிகைக்கும் மேனேஜருக்குமான உறவு வர்த்தக ரீதியிலானதுதான் என்றாலும், என்னையும் சினிமாவையும் நம்பி வருகிறவர்களை, ஒரு தந்தை ஸ்தானத்தில்தான் வழி நடத்திச் செல்கிறேன். இதையெல்லாம் அவர்கள் நினைத்துப் பார்ப்பார்களா அல்லது காரியம் முடிந்ததும் மறந்து விடுவார்களா என்றெல்லாம் எண்ணி எந்தச் செயலையும் செய்வது கிடையாது.''

- **ச.ந. கண்ணன்**

படங்கள்: **சந்தோஷ் ராஜ்**

## அட... அட...!

பேட்டிக்காக இல. கணேசன் வீட்டுக்குச் சென்றால், முதலில் ஒரு கிளாஸ் 'ஜில்' மோர் கொடுத்துவிட்டுத் தான் பேசத் தொடங்குகிறார். அப்படியே நாம் மறந்துவிட்டு வந்தாலும், தொலை பேசியில் தொடர்புகொண்டு, ''என்னப்பா... மோர் குடிக்காமலே போயிட்டீங்க... வந்து குடிச்சிட்டுப் போங்கப்பா...'' என்று அன்புடன் கூறுவதை வழக்கமாகக் கொண்டுள்ளார்.

# தைராய்டு குறைபாடுகளுக்குத் தெய்வீக மூலிகைகளும் & இயற்கை சிகிச்சை முறைகளும்



## பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது



நம் உடலில் பல வகையான சுரப்பிகள் (Glands) உள்ளன. இவைகள் சுரக்கும் திரவங்கள் (Hormones) நம் உடலின் சீரான இயக்கத்திற்கும், வளர்ச்சிக்கும், ஆரோக்கியத்திற்கும் மிகவும் முக்கியமானவை. நம் உடலில் உள்ள ஒவ்வொரு சுரப்பியும் உடலின் குறிப்பிட்ட உறுப்பின் (Organs) வளர்ச்சிக்கு உதவுகின்றன. உடலில் நாளமுள்ள சுரப்பி, நாளமில்லா சுரப்பி (Duct Gland - Ductless Gland) என இரண்டு விதமான சுரப்பிகள் உள்ளன. நாளமுள்ள சுரப்பி என்பது தான் சுரக்கின்ற திரவங்களை குழாய்கள் மூலம் இரத்தத்தில் கலக்க செய்வது. நாளமில்லா சுரப்பி என்பது தான் சுரக்கின்ற திரவங்கள் (Hormones) நேரடியாக இரத்தத்தில் கலக்கச் செய்து, அவை செயலாற்றும் உறுப்புகளுக்கு அனுப்புகின்றன. ஒரு சில காரணங்களால் சுரக்கின்ற ஹார்மோன்கள் கூடுதலாகவோ, குறைவாகவோ சுரந்தால் அவை சார்ந்த உடல் உறுப்பினை பாதிப்புக்குள்ளாகிறது. நாளமில்லா சுரப்பிகளில் தைராய்டு சுரப்பி பற்றியும், இது பாதிப்புக்குள்ளாகும்போது உடலில் தோன்றும் பாதிப்புகள் பற்றியும், அதனை நீக்கும் இயற்கை வழிமுறைகள் பற்றியும் அறிந்துக் கொள்வோம்.



தைராய்டு சுரப்பி கழுத்துப் பகுதியில் குரல் வளையின் இரு பக்கங்களிலும் பக்கத்திற்கு ஒன்றாக அமைந்துள்ளது. இதன் எடை சுமார் 20 முதல் 30 கிராம் இருக்கும். இவை இரண்டு பகுதிகளாக உள்ளன (Lobes). தைராய்டு சுரப்பியில் சுரக்கும் ஹார்மோனின் பெயர் தைராக்ஸின் என்பதாகும்.

ஏதேனும் சில காரணங்களால் தைராய்டு சுரப்பிகளில் பாதிப்புகள் தோன்றும்போது மூன்று விதமான குறைபாடுகள் தோன்றுகின்றன. (1) தைராய்டு சுரப்பி அதிகமாக தைராக்ஸினை சுரப்பது (Hyper Thyroidism), (2) குறைவாக தைராய்டு சுரப்பி சுரப்பது (Hypo Thyrodism), (3) தைராய்டு பருத்து காணப்படுவது (Goitre) என்பதாகும்.

**ஹைபர்தைராய்டிசம் :** தைராக்ஸின் ஹார்மோன் அதிகமாக சுரப்பதால் தைராய்டு சுரப்பி வீங்கி பருத்து காணப்படுவதே ஹைபர் தைராய்டிசம் என்பதாகும். இந்த தைராக்ஸின் அளவு இரத்தத்தில் அதிகமாக கலந்தால் உடல் படபடப்பு, நெஞ்சுப்படபடப்பு, அதிகமான இதய துடிப்பு, உடல் சோர்வு, தலைவலி, உடல் எடை குறைதல், அதிகமான பசி, வயிற்றுப் போக்கு, உடல் சூடு போன்ற அறிகுறிகள் இருக்கும். பெண்களுக்கு மாதவிடாயில் மாற்றம், விரல்களில் நடுக்கம் போன்றன இருக்கும்.

**ஹைபோதைராய்டிசம் :** தைராக்ஸின் அளவு இரத்தில் குறைவாக இருந்தால் இதற்கு ஹைபோதைராய்டு என்று பெயர். குழந்தைக்கு பிறப்பிலேயே இவ்வாறு இருந்தால் ஏற்படும் நோய்க்கு கிரிடினிசம் என்றும், பெரியவர்களுக்கு இரத்தத்தில் குறைவாக இருந்தால் ஏற்படும் நோய்க்கு மிக்ஸிடிமா என்று பெயர். குழந்தைகளுக்கு வளர்ச்சி தடைபடுதல், மன நிலை குன்றி இருத்தல், தோல் உலர்ந்து, மென்மையற்று, வீங்கி தடித்து காணப்படும். பால் சுரப்பிகளின் (Sexual Organs) வளர்ச்சியின்மை, போன்ற அறிகுறிகளும், பெரியவர்களுக்கு தோலில் முடி உலர்ந்து, சொரசொரப்பாகி உதிர்தல், முகம் எவ்வித உணர்ச்சிகளும் அற்று வீங்கி காணப்படுதல், சோர்வு, உடல் எடை அதிகமாதல், அடிக்கடி சளி பிடித்தல், உடலின் வெப்ப நிலை குறைவு, நாடி துடிப்பு குறைவு போன்ற அறிகுறிகள் தோன்றும்.

CKM
DIVINE HERBAL CENTRE

*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்**

**தலைமை முகவரி :** அஞ்சல் பெட்டி 30, எண்.1, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (வ.ஆ.மா.) - 635 601 ✆ : 04179-220469, 222769 Cell : 9443438670

**சென்னை முகவரி :** 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10. ✆ : 044-26424285, 26427638 Cell : 9444161670

**டெல்லி கிளை :** Mrs.Valli, 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011-25736220 Cell : 9868026743

**மேலே உள்ள மூன்று முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7**

| 7 & 8 ந் தேதி - மும்பை : | 9 ந் தேதி - பெங்களூர் : | 20 & 21 ந் தேதி - புதுடெல்லி : |
|---|---|---|
| காலை 9 to இரவு 8 மணி வரை<br>The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR). ✆ : 24011589, 24083879 | காலை 11 to மாலை 1 மணி வரை<br>Hotel Ajantha, 22A, Mahatma Gandhi Road, Bangalore - 560 001. ✆ : 2558432 1 | காலை 9 to இரவு 8 மணி வரை<br>6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011 - 25736220, Cell : 9818209458 |

# உள்ளம் துறந்தவன்

மரகதம் கோபமாகப் பார்த்து, "என்ன அர்த்தத்துல இந்தப் பைத்தியக்காரக் கேள்வியக் கேக்கற கல்யாணி?" என்றாள்.

"மஞ்சு எங்களுக்கெல்லாம் அத்தை மக. அப்பாவுக்குத் தங்கை மகங்கறதை கொஞ்சம் ஞாபகப்படுத்தலாம்னுதான்."

"சொந்த மக மாதிரிதான் வளர்த்தோம்... இல்லை, நீ வேற என்னவோ விபரீத அர்த்தத்தில் கேக்கறே."

நாகரத்தினம், "அத்தை, கல்யாணி கொஞ்சம் கிறுக்கு. இப்படித் தான் பளிச்சுன்னு பேசுவா. மதிக்காதீங்க" என்றார்.

"ஆமா, நீங்க ஒருத்தர்தான் இந்த வீட்டில நேரான ஆசாமி பாருங்க."

"சரி, சரி, நம்ம சண்டையை கோயமுத்தூர்ல போய் வச்சுக்கலாம் கண்ணு."

அடுத்த அறையில், படுக்கையில் உட்கார்வதற்குள் ராகவேந்தருக்கு மூச்சுத் திணறியதை கவனித்து, மஞ்சரி மிகவும் கவலைப்பட்டாள். அவளுக்குத் தாய் - தந்தை எல்லாம் அண்யாதான். டாக்டர் பாலாவை அழைத்தாள். "இவ்வளவு வீக்கா அண்யாவைப் பார்த்ததே இல்லை. எனக்குக் கவலையா இருக்குது மாமா."

"அவர் ஹார்ட் அத்தனை லோடு வாங்கியிருக்கு மஞ்சரி."

படுக்கையில் உட்கார்ந்தவர், இருவரையும் அருகே அழைத்தார். வார்த்தைகளை இடைவெளிவிட்டு சிரமப்பட்டுப் பேசினார்.

"மாப்பிள்ளை, லண்டன்ல நீங்க போன் பண்ணப்ப உங்க பேச்சைக் கேட்டிருக்கணும். இப்ப உண்மையைச் சொல்லுங்க,

**"சேர்மன் உயிருக்கு ஆபத்துன்னா, பத்து உயிர் தற்கொலை செஞ்சுக்கும்!"**

நான் பிழைப்பேனா?"

"சந்தேகமே இல்லை. நிச்சயம் பழையபடியே உங்களை ஆக்கிக் காட்டத்தானே நாங்கள்லாம் இருக்கோம்."

"உபசாரத்துக்கு சொல்லாதீங்க... டாக்டரா பேசுங்க."

"இல்லைங்க, மெய்யாலுமே உலகத்தில் ஆயிரக்கணக்கானவங்க இந்த ஆபரேஷன் பண்ணிக்கிட்டு உயிர் வாழ்ந்துக்கிட்டிருக்காங்க. மேயோ கிளினிக்லயே வருஷத்துக்கு சரா சரியா இருபத்து நாலு வரைக்கும் பண்ணிருக்காங்க. நானே நாலு செய்திருக்கேன்."

சுஜாதா



"பைபாஸ்ம்பாங்களே அதுவா மாமா?"

"பைபாஸ் இல்லைம்மா... அது தினம் நாலு செய்யறோம். இவருக்கு ட்ரான்ஸ் ப்ளாண்ட் பண்ணணும்."

"அது என்னவோ, சீக்கிரம் செய்து தொலைச்சுருங்களேன். நடக்க முடியலை... பேச முடியலையே."

"கொஞ்சம் காத்திருக்கணும் மாமா... அதுவரை அலட்டிக்காம இருங்க."

"பர்கவா ஆபீஸை அதுக்குள்ள குட்டிச் சுவராக்கிருவான்."

"அதையெல்லாம் முதல்ல மறங்க."

மஞ்சரி சற்று முகம் வெளிறிப் போயிருந்தாள்.

"எளிதா செய்யக்கூடிய பைபாஸ் ஆபரேஷன்னு நெனைச்சேன்."

மரகதம் பால் கொண்டு வந்து கொடுக்க, "நான் படுத்துத் தூங்கட்டுமா?" என்றார் ராகவேந்தர்.

"நல்லாத் தூங்குங்க... நிறையத் தூங்குங்க... ட்ராங்விலைசர் கொடுத்திருக்கோம். நல்லா தூக்கம் வரும்."

"தர்டு க்வார்ட்டர் ரிசல்ட் வர்றதுக்குள்ள..."

"அடாடாடா அண்யா" என்று சின்னக் குழந்தையைப் போல அதட்டினாள்.

இரவு விஜி தன் நண்பர்களுடன் பார்ட்டிக்குப் போயிருந்தான்.

மஞ்சரியும் டாக்டர் பாலாவும் வராந்தாவில் வந்து உட்கார, உள்ளே நாகரத்தினம் போனில் பேசிக் கொண்டிருந்தார்.

"நம்ம ப்ளானை துவங்கிற வேண்டியதுதான்."

பாலா அவரைக் கடந்து செல்லும் போது, "என்னவோ ப்ளான் போட்டுக்கிட்டே இருக்காரு. நீ இப்ப எதிலயும் கையெழுத்துப் போடாதே... டோனருக்காகக் காத்திருக்கோம். இந்தியாவில மாநிலத்துக்கு மாநிலம் சட்டம் வேறுபடுது"

"டோனர்னா?"

"இருதயத்தை கொடுக்கப் போறவர்."

"அப்ப அவரு செத்தப்புறமா?"

"செத்தப்புறம் இதயம் பயன்படாது."

"சரியா சொல்லுங்க."

"மஞ்சு, சில சமயம் சாலை விபத்துலயோ, தலையில் பலத்த அடிபட்டோ சில பேர் கோமாவில் போயிருவாங்க. நினைவு முழுக்க தப்பிவிட்ட நிலையிலிருந்து பலசமயம் நினைவு திரும்பிரும். மூளையில் ஹிப்போகாம்பஸ்னு ஒரு பகுதி இருக்கு. அதுல அடிபட்டு டாமேஜ் ஆயிருச்சுன்னா அவங்க ஏறக்குறைய ஒரு வெஜிட்டபிள் மாதிரி ஆயிருவாங்க. வெளியில ஆகாரம் கொடுத்து துடைச்சு துலக்கிவெச்சா, சும்மா மூச்சு மெஷினா நாள் கணக்குல, வருஷக்கணக்கில் கூட வெச்சிருக்கலாம். ஹார்ட் அடிச்சுக்கிட்டே இருக்கும். இம்மாதிரி சுய நினைவு திரும்பற சாத்தியமே இல்லாத அடிபட்டவங்களை, ப்ரெய்ன் டெட்னு சொல்வோம். சுத்துப்பட்டவங்க சம்மதத்தோட அவங்க இருதயத்தை எடுத்து ஆறுமணி நேரத்துக்குள்ள மற்றொரு ஆசாமிக்கு வெச்சு தச்சுரலாம். அதனால, சென்னை மாதிரி பெரிய நகரங்களில் சாலை விபத்துகள் நிறைய ஏற்படறதால, காத்திருந்தா சில வாரங்கள்ல ஒரு ப்ரெய்ன்டெட் கேஸ் வரும். காத்திருக்கப் போறோம்."

"ஒரு நிபுணர் குழு சான்றிதழ் தரணும். அதுக்கப்புறம் அவருடைய தாயோ, தந்தையோ, மனைவியோ சம்மதம் தரணும். அதுக்கப்புறம் ட்ரான்ஸ் ப்ளாண்ட் பண்ணலாம்."

## நோ டென்ஷன்!

ஆங்கிலம் கலக்காமல் பாடல்கள் எழுதுவதை தமது லட்சியமாகக் கொண்டுள்ள கவிஞர் தாமரை, 'கண்ட நாள் முதல்' எனும் திரைப்படத்துக்காக ஆங்கில வார்த்தைகள் கலந்த பாடலொன்றை எழுதியுள்ளார். கேட்டால், "காட்சியமைப்பின் தேவைக்கேற்ப ஆங்கில வார்த்தைகள் கோக்கப்பட்டிருக்கின்றனவே தவிர, அவை வலிய திணிக்கப்பட்டவை அல்ல." என்கிறார்.

"சில பேர் நல்ல சுய நினைவில் இருக்கும்போது 'எனக்கு இந்த மாதிரி ஏதாவது ஆச்சுன்னா என்னுடைய எல்லா உறுப்புகளையும் தானம் செய்யறேன்'னு சம்மதம் தந்து டோனர் கார்டு வெச்சிருப்பாங்க."

"ஆமா என் ஃப்ரெண்டு அழகேசன் கூட கையெழுத்து போட்டிருக்கான்."

"அந்த மாதிரி கேஸ்கள்ல உடனே நீக்கிரலாம்."

"எல்லாருக்கும் எல்லா இதயமும் பொருந்துமா?"

"இல்லை, ரத்த ஏபி டைப் மேட்ச் பண்ணணும். எடை, உயரம் இதைப் பொறுத்து பல பொருத்தங்கள் பார்க்கணும்" என்றார்.



அருகே சலசலப்பு ஏற்பட்டது. நாகரத்தினம் "ஒரு சிகரெட் பிடிக்கலாம்னு போயிருந்தேன். வராந்தாவில நல்ல காத்து" என்றார்.

"பாலா, உங்களை ஒண்ணு கேக்கணும். ஏபி மாட்சுன்னா என்ன?"

பாலா அவரை சந்தேகத்துடன் பார்த்து, "நாங்க பேசிட்டிருந்ததை..."

"காதில் பட்டுது... அப்ப பெரியவருக்கு மாற்று இதயம் வெச்சே ஆகணும்னு சொல்றீங்க."

"அப்படித்தான்."

"கவலையேபடாதீங்க. தினம் ஒருத்தன் ஈ.சி.ஆர் ரோடு நேஷனல் ஹைவேஸ்ல அடிபட்டு சாவறான். 24 மணி நேரமும் தாம்பரம், கத்திப்பாரா, டோல்கேட் எல்லா இடத்திலயும் நமக்குன்னு தனிப்பட்ட ஆம்புலன்ஸ் ஏற்பாடு செய்து கொண்டு வந்து, கையோடு ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்துடறேன். கவலைப்படாதீங்க. மாமா உயிர், மத்த உயிர்களை விட பத்து மடங்கு மதிப்புள்ளது!"

"எல்லா உயிரும் ஒண்ணுதான் மாமா!"

"உனக்குத் தெரியாது. நம்ம சேர்மன் உயிருக்கு ஆபத்துன்னா, ஒரு பத்து உயிராவது தற்கொலை செய்துக்கும்."

"புரியல."

"ஸ்டாக் விழும், நஷ்டமாகும்... பல பேர் சொத்தை இழப்பாங்க."

"இந்த ஆங்கிள்ல யோசிச்சதே இல்லை. ஆனா மஞ்சரி சொல்றாப்பல எல்லா உயிரும் ஒண்ணுதான். எல்லா இதயமும் ஒரே மாதிரி பம்ப்தான். மாமாக்கு மட்டும் டீலக்ஸ் மாடல் எதும் இல்லை."

"மஞ்சு இதை அந்தப் பொறுக்கிகிட்ட சொல்லி வைக்காதே... ஊரெல்லாம் பரப்பிடுவான்."

"யாரைப்பத்தி சொல்றீங்க?"

"அதான் அழ...கேசன்..."

"பொறுக்கீன்ற வார்த்தை இந்த சமயத்தில் உங்களுக்குதான் கச்சிதமா பொருந்துது..."

"கோவிச்சுக்காத கண்ணு, சும்மா தமாஷ்."

"இதெல்லாம் உங்களுக்கு தமாஷ்னா என்னால பரிதாபம்தான் பட முடியும்."

"ஏய்! பெரிய பெரிய வார்த்தையெல்லாம் பேசாதே, கையெழுத்துப் போட்டுட்டு எந்தக் கழுதையை வேணா கட்டிக்க."

பாலா குறுக்கிட்டு, "என்ன நாகரத்தினம், இப்ப இந்த அழகேசன் பேச்சு வேண்டாம்னு தீர்மானிச்சமா இல்லையா? ஏன் இந்தப் பெண் மனசை துன்புறுத்தறீங்க."

மஞ்சரி டாக்டர் பாலாவின் மார்பில் சாய்ந்து கண்ணீர் விட்டாள்.

(தொடரும்)

# நெஞ்சுக்குள்ள

## காதல் சிறகுகள் 3

**தேவயானி**



**கா**தல் சிறகு மாதிரிதான். ரொம்ப மென்மையான உணர்வு அது. ஒரு மனுஷன் எவ்வளவுதான் கரடு முரடானவனா இருந்தாலும், அவனுக்குள்ளயும் பூ பூக்க வைக்கறதுதான் காதல். என்னைக் கேட்டா, காதலுக்கு இணையான ஒரு சக்தி இந்த உலகத்துல இல்லன்னுதான் சொல்வேன். எத்தன மனிதர்களை உருத்தெரியாம அழிச்சிருக்கு! எத்தன பேரை மனுஷனாக்கி இருக்கு! இவ்வளவு ஏன், எங்கயோ பிறந்த என்னை, இந்தத் தமிழ் நாட்டு மருமகளாக்கியிருக்கு! காதல் ஒரு காந்தம்தான்.

இளமைல எல்லாருக்கும் வர்ற இன்ஃபாச்சுவேஷன் எனக்கும் வந்திருக்கு. என் கனவு நாயகன் யாரு தெரியுமா? ஷம்மி கபூர்னு இந்தி ஆர்டிஸ்ட். ஆசைன்னா கொஞ்ச நஞ்சமில்ல... எங்க வீடியோ லைப்ரரில நான் பார்க்காத அவரோட படமே இல்ல.

அவர் நடிச்ச மொத்தப் படங்களையும் கரைச்சுக் குடிச்சிருக்கேன். அந்தளவுக்கு அவர் மேல பைத்தியம். அவரோட கண்ணு, பேசற அழகு, அந்த உயரம்னு எல்லாம் சேர்ந்து என்னைக் கட்டிப் போட்டுடுச்சு. நல்லது கெட்டது தெரியாத, எது பத்தியுமே யோசிக்காத ரெண்டுங்கெட்டான் வயசுல, கல்யாணம் செஞ்சா ஷம்மி மாதிரி ஒரு ஆளைத்தான் பண்ணணும், இல்ல அவரையேத்தான் பண்ணிக்கணும்னு கனவுல மிதக்க ஆரம்பிச்சுட்டேன். இதை நான் தப்புன்னு சொல்ல மாட்டேன். அது அந்த வயசுக்கே உரிய உணர்வு. ஆனா அதைத் தாண்டி வெளில வந்துடணும். அதுதான் முக்கியம்.

ஒரு கட்டத்துல நானே ஹீரோயினா மாறின சூழ்நிலை வந்தப்ப, நான் கனவு கண்ட ஹீரோக்கள், சினிமால என்னை கட்டிப்போட்ட மனிதர்கள் எல்லாருமே எனக்கு சமமா வந்துட்ட மாதிரி இருந்துச்சு. யாரைப் பார்த்தும் எனக்கு பிரமிப்பு வரல.

# பொத்தி வச்சேன்..!



மாறா, எது காதலுங்கற புரிதல் மெல்ல மெல்ல ஏற்பட ஆரம்பிச்சது. இதுவரை நாம நினைச்சது, ஆசைப்பட்டது எல்லாமே வெறும் கனவுதான்னு புரிய ஆரம்பிச்சது. கனவு கலையக் கலைய நிஜம் என்னை நெருப்பாய்ச் சுட்டது. இத்தன நாள் பைத்தியம் மாதிரி ஒரு மாயச் சூழல்ல கட்டுண்டு கிடந்தோமேங்கிற சுய இரக்கம் என்னை, என் வாழ்க்கையை சுத்திகரிக்க வச்சது. உலகம் புரிய ஆரம்பிச்சதுங்கறதை விட, மெனக்கெட்டு நான் உலகத்தைப் புரிஞ்சுக்கிட்டேன்.

அப்படி நான் புரிஞ்சு, மதிச்ச மனிதர்தான் ராஜகுமாரன். பெயரை மாதிரி குணத்துலயும் அவர் ராஜகுமாரன்தான். சூரிய வம்சம் ஷூட்டிங்லருந்தே எனக்கு அவர் பழக்கம். நட்புதான் எங்க ரெண்டு பேருக்கும் இடையில பாலமா இருந்தது. கண்ணியமான மனிதர். சினிமா ஒரு வனம்னு நினைச்சுட்டிருந்த என்னை 'இல்லை, அது ஒரு பூந்தோட்டம்'னு உணர வச்சதுல ராஜகுமாரனோட பங்கு அதிகம். யதார்த்தத்துக்கும் கனவுலகத்துக்குமான வேறுபாட்டை நான் அவர்கிட்டதான் கத்துக்கிட்டேன். பணத்தை விட மனிதர்களை நேசிப்பார். அவர் ஸ்பாட்ல வேலை செய்யும்போது பார்த்திருக்கேன்... உணர்வுகளுக்கு அவ்வளவு ஒரு முக்கியத்துவம் தருவார். மரியாதைன்னா என்ன விலைன்னு கேக்கற சினிமா ஃபீல்டுல, தன்கிட்ட வேலை பார்க்கறவங்ககிட்ட கூட அத்தனை அற்புதமா பழகுவார். 'நீ வருவாய் என'தான்

அவர் டைரக்ஷன் பண்ண முதல் படம். அதுல நான்தான் ஹீரோயின். என்னையும் அவர் மனசுல அப்பத்தான் சுதா நாயகியாக்கினார்னு நெனைக்கிறேன். ஆனா, அதுக்கான எந்த அறிகுறியையும் எந்த ஒரு நேரத்துலயும் வெளிப்படுத்தாம அமைதியா இருந்து, தன்னோட காதலை வளர்த்திருக்கார். அந்த மாதிரி இருக்கறது கஷ்டம். நமக்குப் பிடிச்ச ஒருத்தர்கிட்ட பேசும் போது, நம்ம மனசைத் திறந்து எல்லாத்தையும் கொட்டத் துடிப் போம். சந்தோஷம் கண்ணுல வழியும். முகத்துல மின்னல் தெறிக்கும். ஆனா ராஜகுமாரன் இதுக்கெல்லாம் நேர் மாதிரி. அப்படியே உள்ளுக்குள்ள விஷயத்தைப் பூட்டி வச்சுக்கிட்டு மௌன சாமியாரா நடமாடுவாரு. எத்தனை நாள் காதல வளர்த் தாரு... எப்படி எப்படியெல்லாம் என்னை பூஜித்தாரோ தெரியல... முதல் படம் ஹிட். நம்மாளுக்கு தைரியம் வந்துடுச்சு. தகுந்த சமயத்துக்காகக் காத்திருந்தவர், என்னை தன்னோட ரெண்டா வது படமான 'விண்ணுக்கும் மண்ணுக்கும்'ல மறுபடியும் ஹீரோ யினாக்கினார். இந்த முறை தலைவரால நேசத்தைப் பொத்தி வைக்க முடியல. ஒரு சுபமுகூர்த்த தினத்துல என்கிட்ட மனசைத் திறந்து சொன்னார். முதல்ல எனக்கு ஷாக்கா இருந்துச்சு. உடனடியா என்னால பதில் சொல்ல முடியல. யோசிக்கணும்னு சொல்லிட்டேன்.

எனக்குள்ள அதுக்குப் பிறகு ஆயிரம் குழப்பங்கள்; யோச னைகள். அப்படியே கொஞ்ச நாள் ஆறப் போட்டுட்டேன். ஆனா ராஜகுமாரனையோ, அவரோட காதலையோ மறுக்குற சக்தி என்கிட்ட இல்ல. உடனடியா ஒப்புக்கற சக்தியும் இல்ல. நெஞ்சுக் குள்ள பொத்தி வச்சேன் பாசத்தை. பலூன்ல காத்து அதிகமானா வெடிக்கிற மாதிரி, ஒரு நாள் திடும்னு என் மனசு காதல்ல நிரம்பி வழிஞ்சு சொல்லுச்சு... 'ராஜகுமாரன்தான் உனக்குப் புருஷன்'னு. அவ்வளவுதான்... அதுக்குப் பிறகு என் மனசை நான் அலைபாய விடல. தீர்மா னமா அவர்கிட்ட ஒப்புதல் சொன்னேன். எங்களுக்குள்ள தனித்தனியா அரும்பி, ஒரு



**"நான் இருந்த பொஸிஷன், ஸ்டேட்டஸ், அந்தஸ்து எல்லாமே ராஜகுமாரன் முன்னாடி தூசுதான்!"**

கட்டத்துல ஒண்ணா பூத்த காதலுக்குப் பிறகும், எங்களால சந்தோ ஷமா இருக்க முடியல. காரணம், எங்க வீட்ல என்னோட அன்புக் குக் கிடைச்ச அவமரியாதைதான். யாருமே சரியா எங்களப் புரிஞ்சுக்கல. நல்ல வேளையா அவங்க வீட்ல ஏத்துக்கிட்டாங்க. எத்தனையோ கஷ்டங்கள்... துயரங்கள்... மூணு வருஷம் காதலை பொத்திப் பொத்திப் பாதுகாத்துட்டு, அப்புறமா கல்யாணம்

பண்ணிக்கலாம்னுதான் மொதல்ல முடிவெடுத்திருந்தோம். ஆனா எங்க குடும்பத்துல பல பிரச்னைகள் ஏற்பட்டதால, மூணே மாசத்துல திருமணம் செஞ்சுக்க வேண்டிய நிலைமைக்கு நாங்க தள்ளப்பட்டோம். அன்னிக்கு நான் முன்னணி ஹீரோயின்கள்ல ஒருத்தியா இருந்தேன். நான் இருந்த பொஸிஷன், ஸ்டேட்டஸ், அந்தஸ்து எல்லாமே ராஜகுமாரன் முன்னாடி எனக்கு தூசியாத்தான் தெரிஞ்சது. துணிஞ்சு அவரைக் கைப்பிடிச் சேன்.

**க**டவுள் என்னைக் கைவிடல. எங்க இல்வாழ்க்கை தொடங்கி இது நாலாவது வருஷம். பல பேர் பொறாமையா பார்க்கத்தான் வாழ்ந்துட்டு வர்றோம். இடையில பொருளாதார ரீதியா சில சிக்கல்களை சந்திக்க வேண்டி வந்தது. நாங்க எடுத்த 'காதலுடன்' படம் சரியாப் போகல. 'தேவயானி இனி அவ்ளோதான்'னு யார் யாரோ, என்னென்னமோ பேசினாங்க. ஆனா அதைப் பத்தியெல்லாம் நாங்க கவலைப்படல. போராட்டத்துல வெற்றியும் தோல்வியும் சகஜமான ஒண்ணு. ரெண்டையும் ஒரே மாதிரி பாவிக்கக் கத்துக்கணும். அப்பத்தான் வாழ்க்கையில ஜெயிக்க முடியும். அந்த தன்னம்பிக்கை எங்ககிட்ட ரொம்பவே இருக்கு. இதை மட்டும் மனசுல வச்சுக்கிட்டு கஷ்டப்பட்டு உழைச்சோம். இன்னைக்கு எல்லாத்தையும் சமாளிச்சு நல்லாத்தான் இருக்கோம். அன்பும், விட்டுக் கொடுத்தலும் இருக்குறவரை எங்க உறவு இன்னும் பலப்பட்டுக்கிட்டேதான் இருக்கும்.



**கா**தல் மட்டும் இல்லைன்னா, இன்னைக்கு ஒரு நல்ல கணவர் எனக்குக் கிடைச்சிருக்க மாட்டார். எப்பவும் என்னை 'அம்மா'ன்னு தான் கூப்பிடுவார். தாய்க்குத் தர்ற அங்கீகாரத்த, ஒரு தாரத்துக்கும் தர்ற கணவர் கிடைக்க நான் கொடுத்து வச்சிருக்கணும். அன்பான மாமியார், இதமான உறவுகள்னு என் வாழ்க்கை பூரிப்பா இருக்கு. எல்லாத்தையும் சாத்தியமாக்கின காதலை, நான் கடவுளாத்தான் பார்க்குறேன்.

காதலோட அடிப்படை கண்கள்னு சொல்லக் கேள்விப்பட்டிருக்கேன். ஆனா என்னைப் பொறுத்தவரைக்கும் நம்பிக்கைதான் முக்கியமான விஷயமா படுது. ஒருத்தருக்கொருத்தர் பரஸ்பரம் வைக்கிற நம்பிக்கை மட்டுமில்லாம, காதல் மேல வைக்கிற நம்பிக்கைதான் எந்தவொரு காதலையும் வெற்றியாக்குதுங்கறது என்னோட நம்பிக்கை. இந்த உறுதிதான் என்னை என் ராஜகுமாரனோடு சேர்த்து வச்சிருக்கு; ராஜகுமாரி மாதிரி வாழ வச்சிருக்கு!

சந்திப்பு : **மு.மாறன்**



"டாக்டர், கழுகுக் கண்களெல்லாம் மனிதர்களுக்குப் பொருத்தலாமா?"

"முடியாது!"

"அதானே, என் மாமியார் கண்தானம் செய்யப் போறதா சொன்னப்பவே சந்தேகப்பட்டேன்!"

- ஆர். ராஜகோபால்

"டீ.வி.யில மெகா தொடர் பார்த்துக் கொண்டே வெங்காயத் தோலும் உரிக்கிறியே...?"

"கண்ணீர் சிக்கனம்... டு இன் ஒன்!"

- கு. அருணாசலம்





"இப்பத்தானே பவுலர் பந்தை வீசப் போறாரு. அதுக்குள்ள அம்பயர் அவுட் கொடுக்கிறாரு?"

"அவுட் இதுக்கு முந்தி வீசிய பந்துக்காம்!"

- ஹிதாயத் ஹுமாயூன்

''இதோ பாரு கமலம்... எதிர்க்கட்சிக்காரங்க வேணும்னா என்னை கறை படிந்த அமைச்சர்கள் பட்டியல்ல சேர்த்திருக்கலாம்... அதுக்காக நீயும் கையுறை அணிஞ்சுக்கிட்டு சமைக்கச் சொல்றது கொஞ்சம்கூட சரியில்ல...!''

- வே. ஆறுமுகம்



# ஜோக் ஜோக்!



''எல்லாக் கட்சிக் கொடி கலர்லயும், ஒரு கொடி தயார் பண்ணுங்கன்னு தலைவர், திடீர் உத்தரவு போட்டுருக்காரு.''

''ஏன் திடீர்னு?''

''எந்த நேரத்துலயும், நாம கட்சி மாற ரெடியா இருக்கணுமாம்!''

- வி.ஆர். கிருஷ்ணன்



''ஆபரேஷன் ஃபீஸோட, ஜோசிய ஃபீஸ் அம்பது ரூபான்னு சேர்த்துப் போட்டிருக்கீங்களே... எதுக்கு டாக்டர்?''

''உங்களுக்கு ஆயுள் கெட்டியான்னு பார்த்துட்டுத்தானே இந்த ஆபரேஷனையே ஆரம்பிச்சேன்!''

- கிரிஜா மணாளன்

# “‘அம்மா’தான் எனக்கு அப்பா!”



சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டு உருக்குலைந்து கிடக்கிறார் அதிரடி அரசியல்வாதி தாமரைக்கனி. அ.தி.மு.க.வில் ஐக்கியமாகி, குடும்பத்தையே மறந்துவிட்ட மகன் இன்பத்தமிழனை நினைத்து வருந்தியவர், பத்திரிகை மூலம் தனது மகனுக்கு பகிரங்கக் கடிதமெல்லாம் எழுதிப் பார்த்தார். எதற்கும் பதிலளிக்காத இன்பத்தமிழன் முதல்முறையாக நம்மிடம் மனம் திறந்து பேசினார்...

“அவரைப் பத்திப் பேசவே எனக்குப் பிடிக்கலை. அவர்தான் பத்திரிகைகள்ல பேட்டி, கடிதம்னு இறங்கிட்டாருன்னா, போட்டியா நானும் பதிலுக்கு பதில் சொல்லணுமான்ற யோசனையிலதான் இவ்ளோ நாள் அமைதியா இருந்தேன். இருந்தாலும் என் தரப்பு நியாயத்தை சொல்றதுதான் முறைன்றதால இப்ப பேசறேன்...

அந்தாளு எனக்குப் பண்ணாத அட்டூழியமே கிடையாது. எலக்ஷன்ல அவரை எதிர்த்து நின்னதுக்காக, எனக்கு வீடு கொடுக்கக் கூடாது... லாட்ஜ்ல ரூம் கொடுக்கக் கூடாதுன்னு மிரட்டியிருக்காரு... அப்படியே கொடுத்தா முனிசிபல் வாட்டர் கிடைக்காது... அது... இதுன்னு மிரட்டினதால, அவங்க என் கிட்ட வந்து ‘நாங்க குடும்பத்தோடு உங்களுக்கே வோட்டுப் போட்டுடறோம். தயவு செஞ்சி வீட்டை, ரூமை காலி பண்ணிடுங்க’ன்னு கெஞ்சுவாங்க. அதனால என் மனைவியை அவங்க அம்மா வீட்டுக்கு அனுப்பிட்டு, நான் எலக்ஷன் பூத் ஆபீஸ்ல படுத்துக்குவேன். என் மனைவியை அவங்க அம்மா வீட்டுக்குப் போயி அடிச்சி மிரட்டுவாங்க. அவங்கவங்க தங்களோட பிள்ளைகளை முதலமைச்சராக்கலாமா, மத்திய மந்திரியாக்கலாமான்னு சிந்திச்சிக்கிட்டு இருக்கிறப்போ, இவரு நான் முன்னேற விடாம



# –குடும்பத்தைக் குலைக்கும் அரசியல்!

குறுக்க நின்னாரு...'' என்றவரிடம், 'பொதுக்கூட்டங்களில் நீங்கள் அவரை ஆபாசமாகப் பேசுவதாக தாமரைக்கனி கூறுகிறாரே?' என்றோம்.

''ஆவேசமா பேசுவேனே தவிர, ஆபாசமா பேசமாட்டேன். அப்படியே ஆவேசமா பேசினாலும், அவரு நகராட்சிக்கு என்னென்ன செய்யலை, என்னென்ன தவறு பண்றாரு... அரசு திட்டங்கள் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு கிடைக்காம இருக்க எப்படி முட்டுக்கட்டை போடுறாருன்னு பேசுவேனே தவிர, அவரை மாதிரி பிறப்பை பற்றி கேவலமாகவோ, தனிப்பட்ட வாழ்க்கை பத்தியோ பேச மாட்டேன்... அந்தளவுக்கு நான் ஒண்ணும் தரம் தாழ்ந்த ஆளும் கிடையாது.''

**என்னதான் அவர் மீது கோபம் இருந்தாலும் உங்கள் இன்ஷியலை எடுக்கலாமா...?**

"அது என் தப்பு இல்லை... அவருதான் மேடைக்கு மேடை 'நீ என் மகனே இல்ல... தைரியம் இருந்தா இனிஷியலை எடுத்துப் பார்'னு சவால் விட்டாரு... எலக்ஷன் நேரத்துல இதைப்பத்தி குடும்பத்தோட பேட்டி கொடுத்து, என்னை அசிங்கப்படுத்தினாங்க... இத்தனையும் நடந்த பிறகுதான், இதுக்கு மேல சகிச்சுக்க முடியாதுன்னு இனிஷியலை எடுத்துட்டேன்... அதுக்காக அப்பா இல்லாமப் போயிடல... முதல்வர் அம்மாதான் எனக்கு அப்பாவா இருக்காங்களே.''

**"அம்மா மட்டும் போதும்... வேற யாரும் வேணாம்!"**




**'இன்பத்தமிழன் நன்றி மறந்தவன்' என்கிறாரே உங்கள் தந்தை...?**

''என்னை வளர்த்து ஆளாக்கினது எங்க தாத்தா ராமசாமிதான். இவரு என்னை வளர்த்துவிடாம, என்னை ஏதோ தவிட்டுக்கு வாங்கினது மாதிரி எதிர்த்து நின்னாரு... அப்படியிருக்க நான் எதுக்கு நன்றிக் கடன் படணும்?" என்று கோபமாக கர்ஜித்தவரை கூல் படுத்த விரும்பி "அமைச்சரான பிறகு உங்கள் துறைக்கு என்னென்ன செய்திருக்கிறீர்கள்...?" என்றோம்.

குஷி மூடுக்கு வந்தவர், "விளையாட்டுத் துறையைப் பொறுத்தமட்டில் கடந்த ஆட்சியைவிட இப்போ அதிகமா மாவட்ட வளாகங்களை இந்த அரசு கட்டியிருக்கு. ஒவ்வொரு மாவட்ட வளாகத்துக்கும் மூன்று முதல் நான்கு லட்ச ரூபாய் மதிப்பிலான விளையாட்டுப் பொருள்களை அனுப்பியிருக்கோம். இரண்டு கோடியே ஐம்பத்தொரு லட்சம் வரைக்கும் பரிசுத் தொகையாவே தந்திருக்கோம்'' என்றார்.

**நோய்வாய்ப்பட்டிருக்கும் இந்தச் சூழ்நிலையிலாவது நடந்ததை மறந்து அப்பாவை நேரில் போய்ப் பார்க்கலாமே?**

"அவர் எனக்குச் செய்த கொடுமையை மறக்கவும் முடியாது, மன்னிக்கவும் முடியாது. எனக்கு மறுவாழ்வு கொடுத்த அம்மாவுக்கு மட்டும்தான் நான் விசுவாசமா இருப்பேன்... மத்தவங்க யாரும் எனக்குத் தேவையில்லை.''

**- இரா.முத்துக்குமார்**

படம் : **ராஜன்**

# மகனுக்காக...

விஜயநிர்மலன்

விறகு அடுப்பின் புகை எரிச்சலில் கண்களைக் கசக்கியபடி, கழுவி வைத்திருந்த அரிசியை உலைப் பாத்திரத்தில் போட்டுக் கொண்டிருந்தாள் கருப்பாயி.

"வீட்ல ஒரு எலி இருந்துக்கிட்டு ஆட்டம் போடுதுக்கா. கருவாட்டுத் தலை ஏதாச்சும் ஒண்ணு இருந்தாக் கொடு. 'பொறி' வெச்சு, இன்னைக்கு அதை பிடிச்சே தீரணும்." - சொல்லிக்கொண்டே உள்ளே வந்தாள் எதிர் குடிசைக்காரி கண்ணம்மா.

"இருக்குதுடி. தர்றேன் உட்காரு..." என்றாள் கருப்பாயி.

"என்னக்கா... இன்னுமா ராத்திரி சமையல் முடியல...?"

"அதான் பார்க்கிறியே... என் புள்ள மாணிக்கத்துக்கு சுடச்சுட சாப்பிடறதுதான் பிடிக்கும். எட்டரை மணி வண்டிக்குத்தானே வருவான். அதுக்குள்ள முடிச்சுட மாட்டேன்!"



"ஆமா... இதென்ன அதிசயமா இருக்கு... ரெண்டு பேருக்கு சோறு வடிக்க ஒசரமா பெரிய பாத்திரம் எதுக்கு...? சின்னதா எடுத்துக்க வேண்டியதுதானே..!"

"................"

"என்னக்கா... நான் சொன்னது..."

"புரியாம இல்லடி. ம்... உன்கிட்ட சொல்றதுக்கென்ன... மாசக் கடைசி. மாணிக்கத்துக்கு நாளைக்கித்தான் சம்பளம். அரிசி கொஞ்சமாத்தான் இருந்துச்சி. பாவம் புள்ளைக்கு கல் உடைக்கிற வேலை. அடிச்சுப் போட்டது மாதிரி களைச்சுப் போய் வீட்டுக்கு வருவான். பசியோடு சாப்பிட உட்காரும்போது, சோறு குறைவா இருக்குதுன்னு தெரிஞ்சா மனசு 'பொசுக்'குனு போயிடுமே...! அம்மா வேற சாப்பிடணுமேன்னு, பேருக்கு சாப்பிட்டு எழுந்துக்குவான். இப்படி உயரமான பாத்திரத்துல சமைச்சா அளவு தெரியாதுல்ல. அவன் வயிறு நெறஞ்சா தாண்டி எனக்கு மனசு நிறையும். அதுக்குத்தான். இப்போ... புரியுதா?"

"உனக்கு ரொம்பப் பெரிய மனசுக்கா." உணர்ச்சி வசப்பட்டு சொன்னாள் கண்ணம்மா. ●



**தகவல் :**

Google, Yahoo இந்த இரண்டை அடிக்கடி சுவாசிக்கிற ஆளா நீங்க? இந்த இரண்டுலயும் தனித்தனியா தேடாம, ஒரு விண்டோவுல தேடுற வசதி கிடைச்சா எப்படி இருக்கும்! www.yagoohoogle.comக்கு போங்க. ஸர்ச்-ல கீ வேர்டைத் தட்டுங்க! Google ரிசல்ட், Yahoo ரிசல்ட் ரெண்டும் ஒண்ணா கிடைக்கும். ஒப்பிட்

# டென்னிஸ் டார்லிங்!

YaGooHoo!gle

டுப் பார்த்து தேவையானதை எடுக்கலாம்.

**தமிழ் :**

தமிழில் குறிப்புச் சொற்களை தட்டச்சு செய்து, தமிழ் பக்கங்களை மட்டும் தேட உதவுகிறது www.jaffanlibrary.com/tools/google.htm. 'சுரதா யாழ்வாணன்' என்பவரால் உருவாக்கப்பட்ட இதனை, தமிழின் யுனிகோட் தேடல் தளம் எனலாம். www.jaffanlibrary.com/tools-க்கு சென்றால் எழுத்துக்கள், எழுத்து மாற்றிகள், தட்டச்சு செயலிகள், தமிழ் மின் பாடல்கள் என சர்வதேசத் தரத்திலுள்ள தமிழ் யுனிகோட் கருவிகளை இலவசமாக அள்ளலாம்.

**டௌன்லோட் :**

கண்ணு - மண்ணு தெரியாம, கம்ப்யூட்டர் கேம்ஸைக் காதலிக்கிற கூட்டம் ஒண்ணு இருக்குது (நானும்தான்). அவங்க இலவசமா கேம்ஸை 'இறக்குமதி' பண்ணிக் கொண்டாட சரியான தளம் download-game.com. ஆக்ஷன், போர்டு, கார்டு, ரேஸ், பஸில், சாகசம் என பல கலர்ல கேம்ஸ் கொட்டிக்கிடக்கு. லீவை லவ்லியா அனுபவியுங்க.

**நட்சத்திரம் :**

டென்னிஸ் டார்லிங் சானியாவுக்கும், விசிறிகள் போட்டி போட்டுக் கொண்டு 'தளம்' போட்டுட்டாங்க. Sania-mirza.net. சானியா பேட்டிகள் (வீடியோவாகக்கூட), செய்திகள், புகைப்படங்கள், புள்ளிவிவரங்கள் என சகலத்தையும் 'சர்வீஸ்' பண்றாங்க. மிர்சா பத்தி ஃப்ரெஷ்ஷா நிறைய தகவல்கள் கிடைக்குது. (ஹலோ... வெயிட்... வெயிட்! எங்க ஓடறீங்க!)

- ப்ரெளஸர்

அட!



## வலைபாயுதே



• Dr. அனிதா



• Dr. ஜெயந்தினி

• கோடைக்காலம் வந்தாலே என் சருமம் கருமையடைந்து பொலிவிழக்கிறது. வெளியில் போகவே பயமாக இருக்கிறது. என்ன செய்யலாம்?

- ஸ்ரீகலா, வேலூர்

**எம்.ஹசீனா சையத், ஆயுர்வேத அழகுக்கலை நிபுணர் :**

தர்பூசணிச்சாறு ஒரு டீஸ்பூன், ஆரஞ்சுப் பழச்சாறு ஒரு டீஸ்பூன், முல்தானி மிட்டி அரை டீஸ்பூன், சந்தன பவுடர் அரை டீஸ்பூன், கடலைமாவு அரை டீஸ்பூன் - இவற்றுடன் தேவைப்பட்ட அளவுக்கு தண்ணீர் விட்டு கலந்து கொள்ளவும். இதை முகத்திலும் வெயில் நேரடியாகப் படக்கூடிய இடங்களிலும் பூசிக்கொண்டு கால்மணி நேரம் அப்படியே இருக்க விடுங்கள். பிறகு முகத்தைக் கழுவுங்கள். இப்படி வாரத்தில் இருமுறை செய்து கொண்டால் போதும். உங்கள் சருமம் மின்னும்.

• ஒரு பெரிய பிரச்னையில் மாட்டிக் கொண்டு தவிக்கிறேன். வேறு யாருக்குமே நடந்திராத துரதிருஷ்டம் ஒன்று என் வாழ்க்கையில் நடந்துவிட்டது. இந்தப் பிரச்னை முழுக்க முழுக்க என் மனம் சம்பந்தப்பட்டதுதான். ஆனால் மனநல ஆலோசகர் அல்லது மனவியல் மருத்துவரை அணுகினால் என் அந்தரங்கம் எப்படியாவது வெளியில் கசிந்து விடுமோ என்று பயமாக இருக்கிறது. ஏற்கெனவே ஒருமுறை என் கல்லூரித் தோழியிடம், நம்பி ஒரு விஷயத்தைச் சொல்லி அது வெளியே பரவி பாதிப்படைந்த அனுபவமும் இருக்கிறது. உங்கள் ஆலோசனை என்ன?

- பெயர் வெளியிட விரும்பாத
சென்னை வாசகி

**டாக்டர் ஜெயந்தினி, மனநல மருத்துவர் :**

மனநல ஆலோசகர் அல்லது மனநல மருத்துவரிடம் நீங்கள் செல்ல வேண்டும் என்றுதான் கூறுவேன். ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். எங்களைப் போன்ற ஒவ்வொருவரையும் நூற்றுக்கணக்கானவர்கள் அணுகி ஆலோசனை கேட்டிருப்பார்கள். உங்களைப் பொறுத்தவரை 'வேறு யாருக்குமே நடந்திருக்காத துரதிருஷ்டம்' என்பது, எங்களைப் பொறுத்தவரை ஏற்கெனவே பலருக்கு நேர்ந்த ஒன்றுதான்.

உங்கள் தோழியைப் பற்றி என்னால் கணிக்க முடியாது. ஆனால் நாங்கள் ஒருவரின் பிரச்னைகளைக் கேட்டுவிட்டு ஆலோசனை கூறிய மறுநிமிடமே அதை மறந்து விடுவோம். ஏனென்றால் அடுத்து வருபவரின் பிரச்னைகளை யோசிக்கத் தொடங்கி விடுவோமே. இருந்தாலும் உங்கள் உணர்வுகளைப் புரிந்துகொள்ள முடிகிறது. உங்கள் வீட்டுக்கு அருகில் இல்லாத, உங்களுக்கு முற்றும் புதியவரான ஒரு மனநல ஆலோசகரை நீங்கள் அணுகலாமே. அவரிடம் உங்கள் பெயர் போன்ற (உண்மையான) அடையாளங்களை வெளிப்படுத்தாமலும் இருக்கலாம்.

• இருபது வயதில் எனக்குத் திருமணம் ஆனது. இரண்டு குழந்தைகள். குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டிருக்கிறேன். இந்த நிலையில் என் கர்ப்பப் பையில் கட்டி என்கிறார்கள். கேட்டால் 'ஃபைப்ராயிட்' (Fibroid) என்



# கருப்பை கட்டி கேன்சரா?

கிறார் டாக்டர். இதனால் என் வாழ்க்கையில் பிரச்னை வருமா?

- க. ஆனந்தி, கோவை

**டாக்டர் அனிதா பார்த்தசாரதி, மகப்பேறு மருத்துவர் :**

கர்ப்பப் பையில் கட்டி என்றவுடனே பதற வேண்டாம். இதைத் தொடர்ந்து ரத்தப்போக்கு இருந்தாலோ, முதுகு வலி தெரிந்தாலோ, அனிமியா என்றாலோ தான் மருத்துவரை நாட வேண்டும். மற்ற படி கவலைப்பட வேண்டாம். சில சமயம் இந்தக் கட்டியால் ரத்தப்போக்கு மிகவும் அதிகமாகி, அதனால் வயிற்றுப் பகுதியில் கருட்டி இழுப்பது போல வலி உண்டாக லாம். சில சமயம் சிறுநீரகப் பாதையில் தொற்று ஏற்படலாம். மலத்தை வெளி யேற்றுவதிலும் பிரச்னை ஏற்படலாம். இவற்றிற்கேற்ற மருந்துகள் உண்டு.

கர்ப்பப்பையில் கட்டி என்றவுட னேயே அது புற்றுநோயின் அடை யாளமோ என்ற பயம் பலருக்கும் ஏற்படு கிறது. இந்த பாதிப்பு மிகமிகக் குறைவான பேருக்கே (0.02 பாயிண்ட் முதல் 2 சத விகிதம் வரை). டாக்டரை அணுகினால், உரிய நடவடிக்கைகளை மேற்கொள்வார்.



• Dr. ஜெயந்தி



• எம்.ஹசீனா

**• என் குழந்தையின் மூக்கில் ரத்தக்கசிவு ஏற்படுகிறது. பிறகு அது நின்றுவிட்டாலும் அந்தச் சமயத்தில் மிக வும் பயமாக இருக் கிறது. பக்கத்தில் டாக் டர்கள் யாரும் இல்லை. என்ன செய்ய?**

- எம்.சாந்தி, ஜோலார்பேட்டை

**டாக்டர் ஜெயந்தி விஸ்வநாதன், குழந்தை நல மருத்துவர்:**

உலர்ந்த வெப்பக்காற்று அதிகம் இருக்கக்கூடிய வேலூர், புதுக்கோட்டை போன்ற பகுதிகளில் இதுபோல அதிகம் நிகழ வாய்ப்பு உண்டு. எனவே பயப்பட வேண்டாம்.

கைக்குட்டையில் தண்ணீரை நனைத்து மூக்கில் வையுங்கள். கட்டைவிரல் மற்றும் ஆள்காட்டி விரலால் குழந்தையின் நுனி மூக்கை சில நொடிகளுக்கு அழுத்திப் பிடியுங்கள். இப்படி மூன்றுமுறை செய்யலாம். குழந்தை கொஞ்சம் முன்புறமாக தலை குனிந்து கொண்டிருக்கும்படி இருக்கட்டும்.

குழந்தையின் மூக்கில் உள்ள ரத்த நாளங்கள் மிகவும் மென்மை யானவையாக இருப்பதால், அவை எளிதில் பாதிப்பு அடைகின்றன. ஜலதோஷம் அல்லது மூக்கின் அழுக்கை எடுக்கும் முயற்சி ஆகியவற்றின்போது இந்த பாதிப்பு ஏற்படலாம்.

அடிக்கடி மூக்கில் இருந்து ரத்தம் வந்தாலோ, கீழே விழுந்த பிறகு மூக்கில் இருந்து ரத்தம் வந்தாலோ டாக்டரிடம் காண் பிக்கவும்.

**- ஜி.எஸ்.எஸ்.**



# முணுமுணுப்பு... சிடுசிடுப்பு!

'அன்பே வா' படத்துக்குப் பிறகு நாங்கள் தயாரித்த வண்ணப் படம், பக்த பிரகலாதா. அதில் நிறைய தந்திரக் காட்சிகளை வைத்தோம். இது போன்ற காட்சிகளைப் படமாக்குவதில் கைதேர்ந்த பாபு பாய் மிஸ்திரியின் உதவியாளர் ரவிகாந்த் நிகாய்க், ட்ரிக் ஷாட்களை எடுத்துக் கொடுத்தார்.

புகழ் பெற்ற இசைக் கலைஞர் பாலமுரளி கிருஷ்ணா நாரதர் வேடத்தில் முதலில் நடித்த படம் இது என்பது ஒரு முக்கியச் செய்தி. பாலமுரளி நடித்த ஒரே படம் இது தான் என்றும் நான் நினைக்கிறேன்.

தமிழ், தெலுங்கு, ஹிந்தி ஆகிய மூன்று மொழிகளில் எடுக்கப்பட்ட இந்தப் படத்தில், மூன்றிலும் பாலமுரளிதான் நாரதராக நடித்தார்.

படத்தை ஒரிஜினலாக தெலுங்கில் எடுத்து, பிறகு தமிழில் 'டப்' செய்தோம்.

அப்படிச் செய்த போது நகைச்சுவைக் காட்சிகளை மட்டுமே அந்தந்த மொழிக் கலைஞர்களை வைத்து எடுத்தோம். எனவே உண்மையில் டப்பிங் படமாக இருந்தாலும், பார்ப்பவர்களுக்குப் பெரும்பாலும் அப்படித் தெரியாது.

ரேலங்கி, பத்மநாபன் தெலுங்கிலும், ஏ. கருணாநிதி, டி.எஸ். பாலையா தமிழிலும், ராஜேஷ்வர், தூமல் ஹிந்தியிலும் நகைச்சுவை தந்தார்கள்.

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் எங்கள் பேனரில் ரொம்ப நாட்களாகப் படம் பண்ணாமல் இருந்தார். ஒரு சிறிய மிஸ்அன்டர்ஸ்டாண்டிங் காரணமாக இடைவெளி விழுந்திருந்தது.

எங்கள் கல்கத்தா பங்குதாரர் வி.ஏ.பி. ஐயர், 'உத்தர்புருஷ்' என்ற வங்காள மொழிப்படம் பற்றி குறிப்பிட்டு, 'நல்லா போகுது' என்று சொன்னார். அந்தப் படத்தைப் பார்த்தோம். எனக்கு கதை ரொம்பவும் பிடித்திருந்தது. அந்தப் படத்தின் பிரிண்ட்டை வாங்கி வந்து சென்னையில் மீண்டும் போட்டுப் பார்த்து, அழகாக ஒரு திரைக்கதையை உருவாக்கினோம்.

பின்னர் அந்தத் திரைக்கதையை பெங்களூரில் வைத்து விவாதித்தோம். யார் ஹீரோவாக நடித்தால், அந்தக் கதைக்குப் பொருந்தி வரும் என்று பேச்சு வந்தபோது, நான் சிவாஜி பெயரை வலியுறுத்தினேன்.

'பழைய மனக்கசப்பை மறந்து விடுவோம். நீங்க போய் சிவாஜியிடம் பேசுங்க' என்றார் அப்பச்சி.

நான், என் சகோதரர்கள் குமரன்,





* 'பக்த பிரகலாதா' படத்தில்...

முருகன் ஆகியோர் 'அன்னை இல்லம்' போனோம்.

உடல் நலமின்றி இருந்ததால், அப்போது வீட்டில் ஓய்வில் இருந்தார் நடிகர் திலகம்.

நாங்கள் அவரிடம் பேசி எங்கள் விருப்பத்தைத் தெரிவித்தோம்.

"அதற்கென்ன...? நடிக்கிறேன்" என்று ஒப்புக் கொண்டார்.

"யார் டைரக்ஷன்?" என்று கேட்டார்.

"கிருஷ்ணன் - பஞ்சு"

"பஞ்சு அண்ணன் டைரக்ஷன்ல நான் ஆக்ட் பண்ண மாட்டேன். எனக்கும் அவருக்கும் சரிப்பட்டு வராது'' என்றார் சிவாஜி. இரண்டு பேருக்குமிடையே ஏதோ மனத்தாங்கல் அப்போது வளர்ந்திருந்தது.

"ஒருநாள் நடிச்சீங்கன்னா, எல்லாம் சரியாப் போயிடும்" என்று நான் நடிகர் திலகத்தை கன்வின்ஸ் செய்தேன். சரியென்றார்.

சிவாஜிக்கு உடல்நிலை சரியானதும் 'உத்தர் புருஷ்' படத்தைப் போட்டுக் காட்டினோம்.

''இதில் எனக்குச் சரியான ரோல் இல்லியே... அப்பா ரோல் போட்டா 'படிக்காத மேதை'யில ரங்கா ராவ் பண்ணிய ரோல் போல இருக்கும். பையன் ரோல் போட்டா 'படிக்காத மேதை'யில் நான் போட்ட ரோல் மாதிரி இருக்கும். அந்த டாக்டர் ரோல் பண்ணலாம்... சின்ன ரோல்தான்... நான் வேணும்னா கெஸ்ட் ஆர்ட்டிஸ்ட்டா அந்த ரோல்ல நடிச்சுத் தர்றேனே..." என்றார் சிவாஜி.

"இல்ல ஸார்... நீங்க ஹீரோவா பண்ணுங்க... நல்லா வரும்" என்று நான் என்னுடைய அபிப்ராயத்தைச் சொன்னேன்.

"எனக்கு உடன்பாடு இல்லே சரவணன்... ஆனா உங்களுக்காக வேணும்னா ஆக்ட் பண்றேன்."

அந்த டாக்டர் ரோலைப் பண்ண வேண்டும் என்ற ஆசை அவருக்குள் இருப்பதை நான் உணர்ந்தேன். ஆனால் அதை அசோகன் பண்ண வேண்டும், என்று நாங்கள் ஏற்கெனவே முடிவு செய்து வைத்திருந்தோம்.

"டாக்டர் ரோலில் அசோகன் ஆக்ட் பண்றார்'' என்ற தகவலை சிவாஜியிடம் சொன்னபோது, அதை அவர் பெரிதாக ரசிக்கவில்லை. ஏனென்றால் அப்போது அவர்கள் இரண்டு பேருக்கும் 'டெர்ம்ஸ்'

# ஏவி.எம். சரவணன்

சரியாக இல்லை. அசோகன், எம்.ஜி.ஆர் கேம்ப்பைச் சேர்ந்தவர் என்ற எண்ணம் சிவாஜியிடம் வளர்ந்திருந்தது. சிவாஜியின் மீது சற்று வெறுப்பு அசோகனுக்கும் இருந்தது.

ஆனால் நடிகர் திலகமும் சரி, அசோகனும் சரி, இந்த உணர்வுகளையெல்லாம் நடிக்கும்போது வெளிப்படையாகக் காட்டிக் கொண்டதில்லை என்பது, இருவரின் பெருந்தன்மை என்பதையும் நான் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். இருந்தாலும் ரகசியமாக என்னிடம் ஒருவரைப் பற்றி இன்னொருவர்



• 'உயர்ந்த மனிதன்' படத்தில்...

முணுமுணுப்பார்கள்.

படத்தில் ஒரு காட்சியில் அசோகன் ஹார்ட் அட்டாக்கில் இறந்து போவார். அப்போது எப்படி நடிக்க வேண்டும், முகபாவங்களை எப்படிக் காட்ட வேண்டும் என்று, அசோகனுக்கு சிவாஜி கற்றுக் கொடுத்தார். சிவகுமார் சிவாஜியின் மகன் என்ற உண்மையைச் சிவாஜியிடம் சொல்ல அசோகன் வரும்போது, அவரால் முடியாமல், இருதய வலி வந்து செத்துப் போவதாக அந்தக் காட்சி. இடைவேளையின்போது சிவாஜி தனக்குக் கற்றுக் கொடுத்தது பற்றி என்னிடம் மெதுவான குரலில் அசோகன் கேட்டார்: "ஏண்ணே... இந்த ஆள் (சிவாஜி) என்னைக் கவுத்திடலியே."

"அடப்பாவி மனுஷா... அவர் எவ்வளவு அக்கறையா கத்துக் கொடுக்கிறார்... ஏன் அப்படி நினைக்கிறீங்க?" என்றேன் நான்.

இன்னொரு பக்கம் சிவாஜி, "எனக்கு அவன் (அசோகன்) துரோகி. அவனுக்கு நான் ஆக்ஷன் கத்துக் கொடுக்க வேண்டியிருக்கு பார். படம் நல்லா வரணும்ங்கறதுக்குத்தான் நான் சொல்லித் தரேன்..." என்று என் காதில் கமெண்ட் அடித்தார்.

அதேபோல இன்னொரு சம்பவமும் இப்போது நினைவுக்கு வருகிறது. ஒரு நாள், 'அந்தநாள் ஞாபகம், நெஞ்சிலே வந்ததே' பாடல் காட்சி ஷூட்டிங். சிவாஜி நடித்துக் கொண்டிருந்தார். சற்று தொலைவில் அசோகன், அவரைச் சுற்றிக் கூட்டம் இருந்தது. எம்.ஜி.ஆரை, எம்.ஆர். ராதா எப்படிச் சுட்டார் என்ற விவரத்தை அங்கே அந்தக் கூட்டத்துக்கு அசோகன் மோனோ ஆக்டிங் செய்து காட்டிக் கொண்டிருந்தார். ஷூட்டிங் ஸ்பாட்டுக்கும், அசோகன் இருந்த இடத்துக்கும் இடையே நிறைய தூரம் இருந்தபோதிலும் சிவாஜி, என்னைக் கூப்பிட்டு "அவனை முதலில் போகச் சொல்லு" என்றார்.

"அசோகன் தூரத்தில்தானே இருக்கிறார்" என்று சொல்லிப் பார்த்தேன்.

"என்னை ரொம்ப டிஸ்ட்ராக்ட் பண்றான். ஒண்ணு அவனை பாக்அப் பண்ணு. இல்ல, நான் பாக்அப் பண்ணிக்கிறேன்' என்றார் சிவாஜி.

பிறகு அசோகனிடம் பக்குவமாகச் சொல்லி, அங்கிருந்து அவரைப் போக வைத்தேன்.

இன்று இருவரும் இல்லை. இறந்தவர்களைப் பற்றிச் சொல்வது நாகரிகமில்லையென்றாலும், நான் இந்தச் சம்பவத்தை இங்கே வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளக் காரணம், கலைஞர்களிடையே ஏற்படும் சிலவகை மனக் கசப்புகள் எப்படி வெளிப்படுகின்றன என்பதைச் சுட்டிக் காட்டத்தான். அதிலும் தமிழ்த் திரையுலகில் இப்படிப்பட்ட கருத்து வேறுபாடுகள், எல்லாக் காலங்களிலும் இருந்து வந்திருக்கின்றன. இதில் எந்தவித ரகசியமும் இல்லை. நடிகர் திலகம், அசோகன் இருவருமே அந்தப் படத்தில் மிக நன்றாக நடித்தார்கள் என்பது உண்மை. சொல்லப்

போனால், சிவாஜி சொல்லிக் கொடுத்ததில் ஒரு சதவிகிதம்தான் அசோகன் நடித்தார் என்பதுதான் என் தனிப்பட்ட கருத்து. அதுவே பெரிய ஹிட்.

படம் நூற்றியிருபத்தைந்து நாட்கள் ஓடி, பெரு வெற்றி பெற்றது. அந்தப் படம்தான் 'உயர்ந்த மனிதன்'

படத்தில் சிவாஜி நடிப்பது உறுதியானதுமே, அவரிடம் சம்பளம் பற்றிக் கேட்டோம்.

"ஷண்முகம் வந்து உங்களிடம் பேசுவார்" என்றார் சிவாஜி. அப்படியே சிவாஜியின் சகோதரர் வி.ஸி. ஷண்முகம் வந்தார்.

"நீங்க என்ன கொடுத்தாலும் வாங்கிக் கலாம்னு அண்ணன் சொல்லச் சொன்னார்" என்றார்.

எங்களுக்கு அது சரியென்று படவில்லை. அந்த மாபெரும் நடிகர் அப்போது என்ன சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தாரோ, அதைத் தருவதுதான் நியாயம் என்று முடிவெடுத்தோம்.

'ஏவி.எம் நிறுவனம் என்ன சம்பளம் தந்தாலும் ஓ.கே' என்று சிவாஜி தரப்பிலிருந்து ஒப்புக்கொள்ளப்பட்டது. ஷண்முகத்திடம் பேசிப் பேசி, கடைசியில் சிவாஜியின் அப்போதைய சம்பளம் என்ன என்ற விவரம் கிடைத்தது.

"கடைசியா ஏ.பி. நாகராஜன் படத்துக்கு அண்ணன் வாங்கிய சம்பளம், இரண்டு லட்ச ரூபாய்!"

எங்களுக்கு அதில் ஒரே ஒரு பாயிண்ட் தான். ஏ.பி.என். அவர்களின் படம் வண்ணப்படம். உயர்ந்த மனிதனோ கறுப்பு வெள்ளை. மேலும் ஏ.பி.என். படத்தில் காஸ்ட்யூம்கள் ஹெவியாக இருந்தன. கனமான அணிகலன்களையும் அணிய வேண்டும். அதேபோல படப்பிடிப்பு நாட்களும் அதிகம். 'உயர்ந்த மனிதன்' படத்தில் அந்தச் சிரமங்கள் ஏதும் இல்லை. ஷூட்டிங் நாட்களும் அதிகம். எனவே சிவாஜிக்கு ஒன்றரை லட்சம் ரூபாய் சம்பளம் சரியாக இருக்கும் என்று எங்களுக்குத் தோன்றியது. இதை ஷண்முகத்திடம் தெரிவித்தோம். மறுபேச்சின்றி ஒப்புக்கொண்ட அவர், "ஆனால் ஒரு கண்டிஷன்" என்றார்.

"இப்போ காலணாகூட தரக் கூடாது. படம் முடிஞ்சி சென்ஸார்ல ஓ.கே ஆனதும், ஒரே பேமண்ட்ல மொத்தமா கொடுக்கணும்!"

ஆனால் 'உயர்ந்த மனிதன்' படப்பிடிப்பில் சிறு தடங்கல் ஏற்பட்டது.

(தொடரும்)




• 'தமிழ் மென்பொருள் கருவிகள்' வெளியீடு...




# மென்பொருள்

மத்திய அரசின் 'தமிழ் மென்பொருள் கருவிகள்' வெளியீட்டு விழா, சென்ற வாரம் பார்க் ஷெரட்டன் ஹோட்டலில் வெகு விமரிசையாக நடைபெற்றது. மத்திய அமைச்சர் தயாநிதி மாறன் தலைமையில், தி.மு.க. தலைவர் கருணாநிதி வெளியிட்ட தமிழ் மென்பொருள் கருவிகளின் பயன்பாடுகள் குறித்து பல்வேறு கேள்விகள் எழுப்பப்பட்டு வரும் சூழலில், அதன் சாதக - பாதகங்கள் குறித்து, நியூ ஹொரைஸன் மீடியா (பி) லிமிடெட்டின் நிர்வாக இயக்குனரும், சர்வதேச அளவில் நடைபெறுகின்ற தமிழ் இணைய மாநாடுகளில் பங்கு கொண்டு வருபவருமான, டாக்டர் பத்ரி சேஷாத்ரியிடம் கேட்டோம்.

"தமிழ் மென்பொருள் கருவிகளை குறுந்தகட்டில் வெளியிட்டிருப்பது நம் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு நல்லது. இதில் மின் ஓலை, பொன்விழி மற்றும் ஓப்பன் ஆஃபீஸ் என்கிற அலுவல் செயலி ஆகியன குறிப்பிடத்தகுந்தவை. இதில் துரதிர்ஷ்டம் என்னவென்றால், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதமான குறைபாடுகளும், சந்தேகங்களும் இருக்கின்றன.

முதலில் ஃபான்ட்டை எடுத்துக் கொள்வோம். இந்த மென்பொருளில் 220 ஃபான்ட்கள் உள்ளன. அவற்றில் தொண்ணூறு மட்டுமே சர்வதேச அளவில் பிரபலமான யூனிகோட் சப்போர்ட்டிங் ஃபான்ட்கள். மற்றவை ஏற்கெனவே புழக்கத்தில் இருக்கும் TAB, TAM வகையைச் சார்ந்தவை. எதிர்காலத்தைப் பற்றித்



• பத்ரி

## தமிழ் மென்பொருள் விழாவிலிருந்து...

● All are welcome என்று மட்டும் அழைப்பிதழில் போட்டுவிட்டு, கவனமாக தமிழில் அனைவரும் வருக என்று போடாவிட்டாலும்கூட, அதனைக் கண்டுகொள்ளாமல், கழகக் கண்மணிகள் பெரிய அளவில் திரளவே, கூட்டம் அதிகமாகி மூச்சுத் திணறியது பார்க் ஷெரட்டன் வளாகம். விளைவு, கூட்டத்தில் தள்ளுமுள்ளு ஏற்பட்டு, காவல் துறை தலையிட வேண்டி வந்தது.

தீவிரமாக சிந்தித்துக் கொண்டிருக்கும் போது, இந்த TAB, TAM ஃபான்ட்களை எதற்கு சேர்த்தார்கள் என்பதுதான் தெரியவில்லை.

அடுத்து மின் ஓலை மென்பொருள். இது உலகத்தரம் வாய்ந்தது அல்ல. அதற்குப் பதிலாக Thunder Bird என்கிற மென்பொருளை தமிழ்ப்படுத்தியிருந்தால், அது உலகத்தரத்துடன் அமைந்திருக்கும்.

பயன்தரக் கூடியது என்று பார்த்தால், பொன்விழி OCR மென்பொருளைச் சொல்லலாம். இதன்மூலம் தாளில் அச்சான எழுத்துக்களை அப்படியே ஸ்கேன் செய்து, அதனை Text ஃபைலாக மாற்றிவிடலாம். பின்னர் அதனை நமக்குத் தேவையான முறையில் தவறுகளைத் திருத்தி அழகாக மாற்றலாம். ஆனால் தயாநிதி மாறன் சொல்வது போல கையால் எழுதப்பட்டதை எல்லாம் இந்த OCR மென்பொருள் Text Fileஆக மாற்றாது. காரணம், ஒவ்வொருவர் கையெழுத்தும் ஒவ்வொரு மாதிரி இருக்கும். அடுத்து தமிழில் டைப் செய்யலாம் என்கிறார்கள். ஆனால் கணிப்பொறியில் தமிழில் எழுதுவதற்கு Keyboard Driver என்கிற மென்பொருள் தேவை. அந்த மென்பொருள் இந்த சி.டி.யில் தரப்படவில்லை.

இந்த விஷயத்தில் இன்னும் கொஞ்சம் பொறுமையுடன், இதில் ஆர்வமும் திறமையும் இருக்கும் பலரையும் துணைக்கு வைத்துச் செயல்பட்டிருந்தால், இத்தகைய குறைபாடுகளைத் தவிர்த்திருக்கலாம்."

# சர்ச்சை!




• விழாவில் என்.ராம், தயாநிதி மாறன், கலைஞர், ஜி.கே.வாசன்

• தயாநிதிமாறன் பேசுகையில், 'சோ'வை 'மரியாதைக்குரிய பெரியவர்' என்று அடிக்கடி கூற, சட்டென்று எழுந்த சோ, "நானும் வந்ததிலிருந்து பார்க்கிறேன். என்னைப் பெரியவர், பெரியவர் என்கிறீர்கள். எனக்கென்ன வயதா ஆகிவிட்டது'' என்று சிணுங்க, உடனே கலைஞர், "தயாநிதி உங்களைப் பெரியவர் என்று கூறுவது வயதை வைத்து அல்ல, அறிவை வைத்து'' என்று சமாளிக்க, அரங்கில் பலத்த கரகோஷம்.

• விழாவுக்கு வந்திருந்த ராஜ் டி.வி. ராஜேந்திரன், தயாநிதிக்கும் கலைஞருக்கும் ஸ்பெஷலாக சால்வை அணிவித்து விட்டுக் கிளம்ப, "என்ன சி.டி.யையே வாங்கிக்காமல் போறீங்களே... இதை முதல்ல வாங்குங்க'' என்றுகூறிவிட்டு சி.டி.யைக் கொடுத்தார் தயாநிதி மாறன். 'அவரு வந்ததே சால்வை போடத்தானே' என்றொரு குரல் பார்வையாளர்கள் பகுதியிலிருந்து கேட்டது.

• தயாநிதிக்கு அணிவிக்கப்பட்ட சால்வையில் இருந்த ஒரு நூல், அவருடைய சட்டையில் ஒட்டிக்கொள்ள, அதை எடுக்கச் சொல்லி போட்டோகிராஃபர்கள் கொஞ்சம் ஓவராகவே உணர்ச்சி வசப்பட, பதறிவிட்டார் தயாநிதி. அது நூல்தான் என்று தெரிந்த பிறகு, ப்கூ... இதுக்குத்தானா இவ்ளோ சத்தம் போட்டீங்க..." என்றபடி நகர்ந்தார்.

- முராரி



**அமரர் கல்கி**



# இரவல்

ஒரு நண்பர் என்னிடம் பலமாகச் சண்டை பிடித்தார். நான் புனைபெயர் வைத்துக்கொண்டு பத்திரிகைகளுக்கு எழுதுவதுதான் அவருடைய கோபத்துக்குக் காரணம். "ஏன் சொந்தப் பெயர் போட்டுக்கொண்டு எழுதக்கூடாது? சொந்தப் பெயரைச் சொல்லிக்கொள்ள வெட்கமாயிருக்கிறதா? ஏன் இந்தக் கோழைத்தனம்?" என்று அவர் கேட்டார். உண்மை என்னவென்றால், அவருக்கு ஒரு பிரமை. என்னுடைய கதைகள், கட்டுரைகள் முதலியவற்றினால் எனக்கு வரவேண்டிய கீர்த்தி (!) அவ்வளவும் என்னைச் சேராமல் அநியாயமாய்க் கொள்ளை போய் விடுகிறதென்பது அவருடைய கவலை.

பெயர் போட்டுக் கொள்ளாததற்குக் கோழைத்தனம் காரணமல்ல என்று நான் சொல்ல வேண்டியதில்லை. அப்படி வெட்கப்படும்படியான சங்கதி ஏதேனும் நான் எழுதுகிறேனா என்ன? ஒன்றுமில்லை. பின்னர், புனைபெயர் ஏன்? உலகத்தின் மனப்போக்குதான் அதற்குக் காரணம்.

சொந்தமாகச் சிந்தனை செய்யும் சக்தியை, இந்த உலகத்தில் பகவான் மிகவும் கொஞ்சமாக வைத்துவிட்டார். நம்மில் பெரும்பாலோர் பிறருடைய அபிப்பிராயங்களையே நம்முடைய சொந்த அபிப்பிராயமாகக் கொண்டு போராடுகிறோம். ஓர் இத்தாலி தேசத்துக் கதை சொல்கிறேன், கேளுங்கள்.

டாஸோ, அரிஸ்டோ என்னும் இரண்டு பிரபல நூலாசிரியர்கள் இத்தாலியில் இருந்தனர். இவ்விருவருடைய எழுத்துத் திறமை குறித்து இரண்டு நண்பர்களிடையே வாதம் எழுந்தது. ஒருவர் 'டாஸோதான் சிறந்தவர்' என்றார். மற்றொருவர் 'அரிஸ்டோவின் புலமை அவருக்கு வராது' என்றார்.

முதல் நண்பர் 'டாஸோவுக்குக் கவிதாசக்தி அதிகம்' என்றார். இரண்டாம் நண்பர் 'அரிஸ்டோவின் வசன நடையில் தேனொழுகுகிறது' என்றார். 'ஹாஸ்ய ரசத்தில் டாஸோவுக்கு மிஞ்சித்தான்' என்றார் ஒருவர். 'மொத்தத்தில் அரிஸ்டோவுக்கு மிஞ்சித்தான்' என்றார் ஒருவர். 'மொத்தத்தில் டாஸோவுக்கு ஈடானவர் எவருமில்லை' என்றார் மற்றவர். இவர்களுக்குள் விவாதம் முற்றி, வார்த்தை தடித்து கடைசியில் பெருஞ் சண்டையாகிவிட்டது.

இருவரும் கத்தியெடுத்து ஒருவரோடொருவர் பலமான சண்டை போட்டார்கள். இருவரும் பலத்த காயமடைந்து கீழே விழுந்தார்கள். அப்போது முதல் நண்பன் சொன்னான்... "ஐயோ! டாஸோவுக்காக நான் உயிர் விடுகிறேன். ஆனால் அவன் புத்தகத்தில் ஒரு வரிகூடப் படித்ததில்லை!" என்றான். இரண்டாவது நண்பன் சொன்னான்... "அட கர்மமே! நானும் அரிஸ்டோவின் நூலில் ஒரு வரி கூடப் படித்தது கிடையாது! இதற்காகவா நாம் சண்டை போட்டோம்?" என்றான்.

இப்படித்தான் சாதாரண

# பிழைப்பு!



ஜனங்களாகிய நாம் சண்டை போட்டுக் கொண்டு சாகிறோம். ஏதேனும் ஒரு விஷயம் கேள்விப்பட்டால், அதன் குணாகுணங்களைப் பற்றி முதலில் ஆராய்வதில்லை. அதைச் சொல்வது யார் என்று முதலில் கவனிக்கிறோம். சொல்பவர் பிரசித்தி பெற்றவராயிருந்தால் அல்லது நமக்குப் பிடித்தவராயிருந்தால் உடனே விஷயத்தை ஆதரிக்கத் தொடங்குகிறோம்; அதைப் பாராட்டுகிறோம்; அதன் புகழைப் பாடுகிறோம். சொல்பவர் சாதாரணப் பேர்வழியாயிருந்தால் உடனே அதை மறந்து விடுகிறோம். சொல்பவர் நமக்குப் பிடிக்காதவராயிருந்தாலோ, உடனே குறை சொல்லத் தொடங்கி விடுகிறோம்.

இலக்கியத் துறையில் மட்டுமல்ல; அரசியல், சங்கீதம், சமூக சீர்திருத்தம் ஆகிய எல்லாவற்றிலும் இப்படித்தான். பெரும்பாலும், எல்லாவற்றிலும் நாம் இரவல் பிழைப்பே பிழைத்து வருகிறோம். சென்னையிலுள்ள எனது நண்பர் ஒருவருக்கு ஸ்ரீமான் சீனிவாசய்யங்காரிடம் அபார பிரேமை. ஆகையால் அவருக்குப் பண்டித நேருவைக் கொஞ்சமும் பிடிக்காது. ஒருநாள் நான் பத்திரிகை படிக்க அவர் கேட்டுக் கொண்டிருந்தார். இந்திய சட்டசபையில் ஸ்ரீமான் சீனிவாசய்யங்கார் செய்த பிரசங்கத்தைப் படித்தேன். அப்போது அவர் அடைந்த உற்சாகத்தையும், காட்டிய சந்தோஷத்தையும் சொல்ல முடியாது. பிரசங்கம் முடிந்ததும், "ஓ! நீர் என்னதான் சொல்லும், அந்த ஒரு மனுஷனால்தான் இப்படிப் பேச முடியும்!" என்றார் நண்பர். "சுவாமி! மன்னிக்க வேண்டும். பெயர் தவறாகச் சொல்லிவிட்டேன். இப்பொழுது படித்தது பண்டித நேருவின் பிரசங்கம்" என்றேன் நான். அவரால் நம்ப முடியவில்லை. பத்திரிகையை வாங்கிப் பார்த்துவிட்டு, "சரிதான்; தொலையட்டும். நடுவில் கொஞ்சம் சந்தேகமாய்த்தானிருந்தது. இவ்வளவு அசம்பாவிதமாய் ஐயங்கார் பேசியிருக்க முடியாதே என்றுகூட நினைத்தேன்" என்றார். சற்று முன்னால், நான் பிரசங்கம் நன்றாயில்லையென்று சொல்லியிருந்தால், அவர் என்னை அடிக்கவே வந்திருப்பார்.



- கல்கி கட்டுரைகள்
(தொகுதி -3),
மணிவாசகர் பதிப்பகம்

# மாம் ஃப்ரம் இண்டியா

'டலாஸ்' கோர்ட் நிரம்பி வழிந்தது. அமெரிக்காவே இந்தக் கடத்தல் கேஸில் குலுங்கி நிமிர்ந்தது.

குற்றவாளிக் கூண்டில், ஸ்டீஃபன் விம்மி அழுதபடி உட்கார்ந்திருக்கிறான். (அங்கெல்லாம் கூண்டில் நிறுத்தி வைத்து விசாரிக்க மாட்டார்கள். கொலையாளியாகவே இருந்தாலும்கூட, வசதியாய் நாற்காலியில் அமர்ந்து, கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லலாம்.)

ஜேனட், குழந்தையை மார்புடன் அணைத்தபடி, பார்வையாளர் பகுதியில் 'கரகர'வெனக் கண்ணீர் விட்டபடி அமர்ந்திருந்தாள். ப்ரியம்வதா, அவளுடன் 'டு' விட்டவள் போல முகத்தைத் திருப்பிக் கொண்டு...

பரமேஸ்வரன், அடிக்கொருதரம் தன் ஆசை மனைவி சுகந்தாவைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு...

சுகந்தா, கணவனின் கையை ஆதரவாய் பிடித்தபடி, வழக்கை கவனித்தாள்.

ஸ்டீஃபனின் வக்கீல், தன் கட்சிக்காரரின் நிலையை, கல்லும் கரையும்படியாக எடுத்துச் சொன்னார்:



"மிஸ்டர் ஸ்டீஃபனுக்கு, அந்தப் பெண்மணியைக் கொலை செய்யும் நோக்கமோ, வேறு தவறான எண்ணமோ கிடையாது மை லார்ட். தன் மனைவியின் தாயில்லா ஏக்கத்தை, அவளது கர்ப்ப காலத்தில் நிறைவேற்றி வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். அதில் தவறென்ன இருக்கிறது? ஆனால், அந்த ஆசையை அவர் பூர்த்தி செய்த விதம்தான் கொஞ்சம்..."

"மைலார்ட்... அப்படிப் பார்க்கப் போனால், அமெரிக்காவில் நூற்றுக்கு எண்பது சதவிகிதப் பெண்மணிகள், தங்களது கணவரை விவாகரத்து செய்து, வேறு கணவரை மாற்றிக் கொண்டேயிருக்கிறார்கள். இந்த நிலையில், மாஜி கணவருக்கும் தனக்கும் பிறந்த மகனின் பிரசவத்துக்காக வருவது என்பது, கற்பனையில்கூட முடியாத ஒன்று... அது ஒரு தாயின் சுதந்திரத்தைப் பறிப்பதாகும். ஆயிரம் இருந்தாலும் அம்மாவின் வாழ்க்கை வேறு; மகனின் வாழ்க்கை வேறு... எனக்கென்னவோ, மிஸ்டர் ஸ்டீஃபன், ஓர் இந்தியத் தாயை, தன் மனைவிக்கும், குழந்தைக்கும் வசதியாய் செலவின்றி ஹவுஸ் கீப்பராகவும், பேபி ஸிட்டராகவும் பயன்படுத்துவதற்காகவே கடத்தியிருக்கிறார்..."

அரசு தரப்பு வக்கீல் நீளமாய் பேசி, ஒரு கண்ணாடிக் குடுவைத் தண்ணீரையும் ஒரு 'மடக்'கில் குடித்து முடித்தார்...

## கலகல தொடர் 16

## “என் கணவர் செய்தது மிகப்பெரிய குற்றம்தான். ஆனாலும்...?”



ஜெனட் சாட்சி சொன்னபோது, அவள் குழந்தையை சுகந்தாவே பிடுங்கி, தன் தோளில் சாய்த்துக்கொண்டாள்.

"என் கணவர் செய்தது மிகப்பெரிய குற்றம்தான்... ஆனாலும்... ஆனாலும் ஸ்டீஃபன் எனக்காகச் செய்தான். இதை உடனே ப்ரியம்வதாவிடம் சொல்லாதது என் தப்புதான். எனக்கு இந்த 'இன்டியன் மாம்'மை மிகவும் பிடித்துப் போய்விட்டது... இந்தியப் பெண்கள் ரொம்பவும் கொடுத்து வைத்தவர்கள்... எத்தனை வயசானாலும் அவர்களைச் சீராட்ட, அம்மாக்கள் இருக்கின்றனர். அவர்களுக்கு தங்கள் கணவன், குழந்தைகள்தான் உலகம்... இந்த வழக்கம் எனக்குப் பிடித்திருந்ததினால்தான், நானும், ஸ்டீஃபனுடன் சேர்ந்து, குற்றத்தை மறைத்தேன்... விக்... விக்... அதற்கு உண்டான தண்டனையை ... விக்...விக்..."

ஜெனட் விக்கி விக்கி அழுதபோது, ஸ்டீஃபன் மட்டுமின்றி, கோர்ட் வளாகமே அழுதது. வக்கீல்கள் அழுதனர். நீதிபதி அழுதார். வழக்கை வேடிக்கை பார்க்க வந்திருந்த அமெரிக்கர்கள், பத்திரிகையாளர்கள், டீ.விகாரர்கள், இப்படி சகலமான பேரும்

அனுராதா ரமணன்

'ஓ'வென அழ...

"என்ன ஆச்சு இவங்களுக்கு..."

பரமு, பல்பீரின் தொடையைக் கிள்ளினார்.

"எல்லாருக்கும் அவங்கவங்க அம்மா ஞாபகம் வந்துடுச்சு. அதான்... இந்த கேஸை நேரடியா டீ.வியில ஒளிபரப்பறாங்க... அமெரிக்காவே அழும்..."

"அப்படியா..."

"ஆமா...ஜனாதிபதி புஷ்கூட அழுதுட்டிருப்பாரு..."

பல்பீர் சொன்னது போல, அன்று மாலை, தொலைக்காட்சியில் புஷ், கிளிண்டன், இன்னும் சிகப்பு சிகப்பாய் ஏழெட்டு பெரிய தலைகள் கூடி, தங்கள் கருத்துக்களை வெளியிட...

'விஞ்ஞான வளர்ச்சியும், வியாபார வளர்ச்சியும் ஏராளமாய் உள்ள அமெரிக்காவில், அடிப்படைத் தேவையான தாய்ப் பாசம் கம்மிதான்' என்று ஒவ்வொருவரும் குரல் கம்மப் பேசிக் கொண்டிருக்க...

சுகந்தாவை அன்று கோர்ட்டில் குறுக்கு விசாரணை செய்தார்கள்.

இந்தக் காட்சி, அகில உலகமெங்கும் காட்டப்பட்டது... தமிழ்நாடு, 'ஒருநாள் கிரிக்கெட்டைக்கூட ஒதுக்கி, செய்திக்கே முதலிடம் கொடுத்தது...'

'கடத்தப்பட்ட சுகந்தாவின் வாக்கு மூலம்...

அதிரடி விசாரணையும், நெத்தியடி பதில்களும்...'

தமிழ், தெலுங்கு, இந்தி, மலையாளம், ஆங்கிலம் இப்படி எல்லா சேனல்களிலும், பத்திரிகைகளிலும் சுகந்தா வெட்கத்துடன் சிரித்தாள்.

"உங்களுக்கு டிரான்ஸ்லேட்டர் வேண்டுமா?"

நீதிபதியின் கனிவான கேள்விக்கு, புன்னகையுடன் பதிலளித்தாள் சுகந்தா.

"நோ... தாங்க்ஸ்.. ஐல் மானேஜ்..."

அடுத்து கேட்கப்பட்ட கேள்விகளுக்கெல்லாம் தங்கு தடையின்றி, ஆங்கிலத்திலேயே பதிலளித்தாள் அவள்.

பரமுவின் திறந்த வாய்க்குள் போய் வர அமெரிக்காவில் ஈக்களோ, கொசுக்களோ இல்லை.

"மிஸ்டர் ஸ்டீஃபன் உங்களை எந்தவிதத்தில் எல்லாம் துன்புறுத்தினார்..."

"கடவுளே... அவர் எதுக்கு என்னைத் துன்புறுத்தணும்? அவருடைய மனைவிக்கு நல்ல அம்மா தேவையாக இருந்தது. கடத்தினார். என்னை மிகவும் அன்பாக, ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொண்டார்."

"இருந்தாலும் மனரீதியாக நீங்கள் துன்புறுத்தப்பட்டீர்கள்தானே...?"

சுகந்தா சிரித்தாள். கம்பீரமாய் தன்னைச் சுற்றியுள்ள கூட்டத்தைப் பார்த்தாள்... அவள் அப்படி கழுத்தைத் திருப்பிய போதெல்லாம், அவளது வைர பேஸரி ஒளிர்ந்தது..

"மிஸ்டர் ஸ்டீபன் என்னைக் கடத்திய போது, கொஞ்சம் குழப்பமாக இருந்தது. ஆனால், ஜெனட்டைப் பார்த்ததும், இவர்களின் பிரச்னை புரிந்துவிட்டது...

மேன்மை பொருந்திய நீதிபதியிடம் நான் தாழ்மையுடன் முறையிட்டுக் கொள்கிறேன்... நிறைமாத கர்ப்பிணிகளுக்கு சுகப் பிரசவம் ஆவதற்கு, இந்த நாட்டில், எத்தனையோ வழிமுறைகள் எல்லாம் இருக்கின்றன... பாருங்கள்... பிறக்கப் போகிற குழந்தையை எப்படித் தூக்குவது, குளிப்பாட்டுவது, நாப்கின் மாற்றுவது எல்லாம் சொல்லிக் கொடுக்கிறீர்கள்... பிறந்த குழந்தைக்கும் விதவிதமான தொட்டில்கள், பால் பவுடர்கள், ஏன், தாய்ப்பாலை எடுத்து ஃபிரிட்ஜில் ஸ்டோர் செய்து வைக்கக்கூட, மிஷினையும், வழிமுறைகளையும் கண்டுபிடித்துவிட்டீர்கள்...

ஆனால்... ஒவ்வொரு இளம் தாய்க்கும்

## சூப்பர்!

நீண்ட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் தமிழில் பிஸியாகியுள்ள கிரேஸி மோகன் இதயத்திருடன், பயணிகள் ஜாக்கிரதை மற்றும் கமலின் மற்றொரு காமெடி படம்), தான் பத்திரிகைகளில் எழுதிய நகைச்சுவைத் தொடர்களை புத்தகமாகத்' தொகுத்து விரைவில் வெளியிடவுள்ளார்.



அம்மா தேவை. கூடவே இருந்து, கர்ப்பிணி மகளை, தன் தோளில் சாய்த்துத் தடவிக் கொடுக்க, குழந்தை அழுதால் தாலாட்டுப் பாட, பிள்ளை பெற்றவளுக்கு எது உடம்புக்கு நல்லதோ, அதைச் சமைத்துப் போட... தாய் அவசியம்...

இங்கே எல்லாரும் தங்கள் வாழ்க்கை தான் முக்கியம் என்றிருக்கிறார்கள். அது தப்பு... பிள்ளையைப் பெற்றால் மட்டும் போதாது..."

சுகந்தா அடித்த லெக்சரில் நீதிமன்றமே



வாயடைத்துப் போனது.

"ஒவ்வொரு பெண்ணுக்கும் பிரசவ சமயத்தில் அம்மா தேவை..."

"அதற்கானப் பயிற்சியை, அமெரிக்கப் பெண்களுக்குத் தர வேண்டும்..."

"இந்தப் பொறுப்பை உணர்த்த வேண்டியது நம் கடமை..."

"அமெரிக்கப் பல்கலைக்கழகத்தில் உடனடியாக இந்த விஷயத்தை ஒரு பாடமாக்கி, இதிலேயும் டாக்டரேட் வாங்கியவர்களை ஊக்குவிக்க வேண்டும்..."

அமெரிக்காவில் எப்பொழுதுமே ஒன்றை நினைத்தால், உடனே செயலாற்றி விட வேண்டும்.

ரிஷி கர்ப்பம் ராத்தங்காது என்பது போல...

சுகந்தாவின் அபாரமான பேச்சினால், ஸ்டீஃபனின் தண்டனை குறைந்தது.

ஜெனட், சுகந்தாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதபடி நன்றி கூறினாள்.

"மாம்... உங்களுக்கு எத்தனை நல்ல மனசு..."

"சரி... பச்சை உடம்புக்காரி... போதும் அழுதது. இப்ப ஸ்டீஃபன் ஆறு மாசம் உள்ளே போயிட்டுத்தானே வரப் போறான்... நீ என்ன செய்யப் போறே...?"

ஜெனட், கண்களைத் துடைத்துக் கொண்டே, குழந்தையை அணைத்தபடி சிரித்தாள்.

"எனக்குத்தான் இவன் இருக்கானே..."

"நன்னா ஆச்சு போ... இன்னும் குழந்தையை ஒழுங்காப் பிடிக்கத் தெரியலே... பிரியா..."

அவள், தன் மகளின் கன்னத்தைத் தொட்டு தன் பக்கம் திருப்பினாள்.

"என்னடீ... கோபமா?"

"உம்...இல்லே..."

"போறுமே... அப்படியே துர்வாசர் கோபத்துக்கு அப்பாவை உரிச்சு வச்சுண்டு பொறந்திருக்கே... உனக்கு எப்ப நாள் சொல்லியிருக்கா டாக்டர்?"

"இன்னும் இருபது நாள்தான் இருக்கு..."

சுகந்தா, மகளின் வயிற்றைத் தொட்டுப் பார்த்தாள்.

"அதுக்குள்ளே ஆகாது. வயிறு இறங்கவே இல்லையே... ஜெனட்டோட டாக்டர் தானே... எப்படியும் நான்தான் பிரசவ சமயத்துல இருப்பேனே... இப்ப என்ன செய்யலாம்... ஜெனட்டையும் நம்மகூடவே உன் வீட்டுக்கு அழைச்சிட்டுப் போகலாம்."

"........."

"என்ன அப்படிப் பார்க்கறே? பாவம். அம்மா இல்லாதப் பொண்ணு..."

"எல்லாம் அம்மா இருக்கா..."

"சரி. இருக்கட்டும். என்னவோ பெத்தவ, புருஷனை டைவர்ஸ் பண்ணிட்டு, எங்கேயோ, எவன்கூடவோ போயிட்டா. எல்லாரும் உங்கப்பன மாதிரி இருப்பாளா... ராமசந்திர மூர்த்தி மாதிரி அகமுடையான் இருந்தா, பெண்டாட்டியும் சீதாதேவியா இருப்பா... ஆடை வாய்க்கறதும், அகமுடையான் வாய்க்கறதும் அவா அவா அதிருஷ்டத்தைப் பொறுத்ததுன்னு தெரியாமயாப் பெரியவங்க சொல்லியிருக்கா..."

"சுகந்தா..."

பரமு, உணர்ச்சிவசப்பட்டு பெண்



**ஆஹா!**

தங்கர்பச்சானின் அடுத்த படத்தில் இரு குழந்தைகளுக்கு அம்மாவாக நடிக்க ஒப்புக் கொண்டிருக்கிறார் சந்தியா.

டாட்டியின் முதுகோடு உரசிக் கொண்டு நின்றார்.

கிஷோர்தான் ப்ரியாவை சமாதானப் படுத்தினான்...

"பிரியா, நீ அம்மாவை உனக்கு மட்டும்தான் அம்மாவா நினைக்கிறே... ஆனா, அவங்க, தன்னை உலகத்துக்கே அம்மாவா நினைக்கிறாங்க. நீயும் குழந்தை பொறந்ததும் அப்படித்தான் ஃபீல் பண்ணுவே... இப்ப..."

ப்ரியா, ஜாடையாய் ஜேனட்டைப் பார்த்தாள். அவளது கரத்தில் இருந்த 'கழுக்மொழுக்' குழந்தையைப் பார்த்தாள்...

என்ன தோன்றியதோ, 'சட்'டெனக் குழந்தையைத் தூக்கி அணைத்தாள். ஜேனட்டின் தோளை ஆதரவுடன் சேர்த்தணைத்தாள்.

"வா... நம்ம வீட்டுக்குப் போகலாம். அம்மா, நம்ம ரெண்டு பேரோட குழந்தையையும் பார்த்துப்பா..."

சுகந்தாவுக்கு இப்பொழுதெல்லாம் நேரமே கிடைப்பதில்லை. இரண்டு குழந்தைகளுக்கும் பாட்டியாக இருப்பதினால் மட்டுமல்ல...

அமெரிக்கப் பல்கலைக்கழகம் ஒன்றில், 'மதர் ஹுட்' பற்றி ஸ்பெஷல் வகுப்புகள் எடுக்கிறாள். லெக்சர் கொடுக்கிறாள்.

அவ்வப்பொழுது பரமேஸ்வரன் என்கிற பெரிய குழந்தைக்கு ஏற்படும் சின்னச் சின்ன கோபங்களையும், தன் புடைவைத் தலைப்பால் விசிறி, ஆற்றி...

"சுகந்தா... இந்தியா நமக்காகக் காத்துண்டிருக்கு. இங்கேயே ஐக்கியமாயிடாதே..."

"ஆகா... மறப்பேனா... அப்படியே பிரியம்வதா, ஜேனட், ரெண்டு குழந்தைகள் எல்லாரையும் அழைச்சிண்டு போய்... நம்ம பிள்ளையையும் லண்டன்லேருந்து வரவழைச்சு... அவனுக்கும் ஒரு கால்கட்டை காலாகாலத்துல போட்டு..."

"ஆமா... வரிசையா நீட்டு... இப்படியே போனா, நீயும் நானும் பழையபடி தனியா இருக்கறது எப்ப.... அசடு..."

சுகந்தா, தன் சமர்த்துக் கணவரின் கன்னத்தை இரு கைகளாலும் வழித்து நெட்டி முறித்துச் சிரிக்கிறாள்...

"போதும், சம்பந்தி ஆர்மோனியப் பெட்டியோடு காத்துண்டிருக்கார். போங்கோ..."

"நல்ல மனுஷன்டீ... நீயில்லாதப்ப எனக்கு எத்தனை பக்கபலமா இருந்தார் தெரியுமோ..."

பரமு, துண்டை உதறித் தோளில் போட்டபடி போக, பல்பீரின் ஆர்மோனியம் ஒரேசமயத்தில் நாலைந்து கட்டையில் உற்சாகமாய்த் துள்ளுகிறது...

(நிறைந்தது)

# பவள விழா பாத யாத்திரை!

## திருச்சி டு வேதாரண்யம்

அது 1930ஆம் வருடம், ஏப்ரல் 13ஆம் நாள். திருச்சியிலிருந்து வேதாரண்யத்துக்கு மூதறிஞர் ராஜாஜி தலைமையில் உப்பு சத்தியாகிரக யாத்திரை கிளம்பியது நூறு பேர் கொண்ட குழு. பதினேழு நாள் நடைப்பயணம். எந்தெந்த வழியாகச் செல்ல வேண்டுமென அன்றைய காங்கிரஸ் பிரமுகர் டி.எஸ்.எஸ். ராஜன் வழியமைத்துக் கொடுத்திருந்தார். வேதரத்தினம் பிள்ளை, காமராஜர், டி.எஸ். அருணாசலம், பத்திரிகையாளர் கே. சந்தானம் உள்ளிட்ட நூறு பேர் அந்தக் குழுவில் இடம் பெற்றிருந்தனர்.

ஆங்கிலேய ஆட்சியின் கடுமையான அடக்குமுறைகளுக்கு எதிராக நடந்த அந்த அறவழிப் போராட்டத்தை முறியடிக்க, அன்றைய ஆங்கிலேய அரசு எடுத்த அதிரடி நடவடிக்கைகள் அனைத்துக்கும் அஞ்சாமல் சென்றனர். பதினேழாம் நாள் வேதாரண்யம் சென்றடைந்து வெற்றிகரமாக போராட்டத்தை நடத்தி முடித்தது குழு.

அதன் பவளவிழா நினைவு பாத யாத்திரை, அன்று நடந்த அதே வழித்தடத்தில்



* ஸ்ரீராம்



* மோகன்



* சமரசம்



* கப்பையா



கடந்த பதின்மூன்றாம் தேதியன்று, திருச்சியிலிருந்து துவங்கியிருக்கிறது. காங்கிரஸின் சேவா தளத் தொண்டர்கள் நூற்று நாற்பது பேர் பாத யாத்திரையின் முழுப் பயணத்திலும் கலந்து கொண் டிருக்கிறார்கள்.

திருச்சியிலிருந்து ஸ்ரீரங்கம் - கல்லணை - திருக்காட்டுப்பள்ளி - திருவையாறு - தஞ்சாவூர் - அய்யம்பேட்டை - பாபநாசம் - கும்பகோணம் - வலங்கைமான் - ஆலங்குடி - நீடாமங்கலம் - மன்னார்குடி - கோட்டூர் - திருத்துறைப்பூண்டி - தகட்டூர் - ஆயக்காரன்புலம் வழியாக ஏப்ரல் இருபத்தெட்டாம் தேதி இரவு வேதாரண்யம் போய்ச் சேருகின்றனர். மறுநாள் அங்கு உண்ணாவிரதப் போராட்டம். முப்பதாம் தேதி காலை ஏழு மணிக்கு வேதாரண்யத்தில், முன்பு உப்பு சத்தியாகிரகம் நடைபெற்ற இடத்தில் பொதுக்கூட்டம் நடை பெறுகிறது.

மயிலாடுதுறையிலிருந்து இந்த யாத் திரையில் பங்கேற்றிருக்கும் முப்பத்து மூன்று வயதான ஸ்ரீராமின் அப்பா பி.கோவிந்தசாமி ராஜா, 1930ஆம் ஆண்டு வேதாரண்ய உப்பு சத்தியாகிரகப் போராட்டத்தில் பங்கு கொண்டவர். "அன்று அப்பா, இன்று நான். நாளை (2030) நூற்றாண்டு விழா நினைவு பாத யாத்திரையில என் மகன்'' என்று மகிழ்ச்சியாகக் கூறுகிறார் ஸ்ரீராம்.

பாதயாத்திரையில் கலந்து கொண் டிருப்பவர்களில் மிகவும் குறைந்த வய துடையவர்கள் மோகன் (19), சமரசம் (18)

## தாண்டி 2005!



**1930** ஆம் ஆண்டில் உப்பு வரியை எதிர்த்து குஜராத்திலுள்ள தாண்டிக்குப் பாத யாத்திரை மேற்கொண்டார் மகாத்மா காந்தி. பவள விழா வருடமான இந்த 2005ல், மகாத்மா காந்தி ஃபவுண்டேஷ னும், அகில இந்திய காங்கிரஸ் கட்சியும் இணைந்து மறுபடி தாண்டிக்கு நினைவு பாத யாத்திரை மேற் கொண்டன. மார்ச் 12 - ஏப்ரல் 6ல் நடைபெற்ற அந்த யாத் திரையின் சில முக்கிய நிகழ்வுகள்...

- இந்த யாத்திரை 2005க்கு அடித்தள மிட்டவர் மகாத்மாவின் கொள்ளுப் பேரனான துஷார் காந்தி. பிரதமர் மன்மோகன் சிங், காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தி போன்றோரின் ஒத் துழைப்பு, யாத்திரைக்கு ப்ளஸ் பாயிண்ட் டாக அமைந்தது.
- தினமும் காலை ஆறு மணிக்கு, தேநீர், தேசியக் கொடியேற்றுதல், சிற் றுண்டி, பிரார்த்தனை, பஜன் என்று ஆரம்பிக்கும் யாத்திரையை, நாள்தோறும் ஒரு பிரமுகர் தலைமையேற்று துவக்கி வைத் திருக்கிறார். தமிழகத்திலிருந்து ஜி.கே.வாசன் தொடங்கி வைத்தார்.
- யாத்திரையின்போது ஒவ்வொரு வியாழனும் ஓய்வு நாளாக அறிவித்து விட்டனர்.
- எட்டுப் பேர் வரை தங்கக் கூடிய துணிக் கூடாரங்களில் பெரும்பாலானோர் தங்கினர். ஐம்பது கூடாரங்கள் தினமும் இடம்பெயர்ந்து, மாலையில் பயணிகள் தங்க வேண்டிய இடத்தில் தயாராக இருக்கும். சர்வதேசத் தரத்துக்கு உருவான நகரும் குளியல், கழிப்பறைகள், மருத்துவக் குழுவுடன் முதலுதவி வண்டி ஒன்றும் யாத்திரையில் இடம்பெற்றன.
- ஒவ்வொரு இடத்திலும் உணவு ஏற்பாடுகள் அந்தந்த பகுதி காங்கிரஸ் கட்சியினரால் வெகு சிறப்பாக மேற் கொள்ளப்பட்டன. நிலக்கடலை இல்லாத உணவு வகையே கிடையாது.
- மகாத்மாவோடு முன்பு யாத்திரை யில் நடந்த எழுபத்தெட்டு நபர்களை நினைவுபடுத்துகிற மாதிரி, காங்கிரஸ் கட்சி, முப்பத்தைந்து வயதுக்கு மேற்படாத

ஆகியோர். தர்மபுரி மாவட்டம் கிருஷ்ணபுரம் கிராமத்தைச் சேர்ந்தவர்களான இவர்கள், ''ராஜாஜி பிறந்த மாவட்டத்திலிருந்து வந்திருக்கிறோம். தேசிய உணர்வுடன் வந்து கலந்துகொண்டுள்ளது மிகவும் மகிழ்ச்சியளிக்கிறது'' என்கின்றனர்.

தமிழ்நாடு காங்கிரஸ் சேவாதளத்தின் தலைமை ஒருங்கிணைப்பாளரான கே.எஸ்.சிவப்பிரகாசம், பாத யாத்திரையை வழி நடத்திச் செல்கிறார். சேவாதள அமைப்பைச் சேர்ந்த ஆர்.பாலம்மாள் (57), கே. அக்தரிபேகம் (37), ஜான் பேகம் (37), என். விமலா (57), வாசுகி (40) ஆகிய ஐந்து பெண்களும் இந்த யாத்திரையில் பங்கேற்றுள்ளனர்.

எண்பத்திரண்டு வயது முதியவர் எம்.வி. சுப்பையா, இதில் கலந்துகொள்வதற்காகவே, கர்நாடக மாநிலம் சிக்மங்களூரிலிருந்து வந்திருக்கிறார்.

''அன்றைய வேதாரண்ய உப்பு சத்தியாகிரக போராட்ட பாதயாத்திரையின்போது, கடுமையான அடக்குமுறைகள் இருந்தன. அதனாலேயே பெரும் பரபரப்பும், எதிர்பார்ப்பும் உருவாயின. ஆனால், தற்போது நடைபெறும் பவள விழா நினைவு பாத யாத்திரையில் அது போன்ற அம்சங்கள் ஏதுமில்லை என்றாலும், நமக்குள் உறைந்து கிடக்கும் தேசிய உணர்வை மீட்டெடுக்க இந்த நடைப்பயணம் உதவுமென நம்புகிறேன்!'' என்கிறார் கே.எஸ். சிவப்பிரகாசம்.

**- இருள்நீக்கியான்**

• வெளிநாட்டினர்...



• துஷார்காந்தி





• வாசன் தொடங்கி வைக்கிறார்...

எழுபத்தெட்டு இளைஞர்களைத் தேர்ந்தெடுத்து யாத்திரையில் பங்கேற்கச் செய்தது.

• பாகிஸ்தான் பெஷாவரிலிருந்து மகாத்மாவின் அன்புக்குப் பாத்திரமான 'எல்லை காந்தி' கான் அப்துல் கபார் கானின் தொண்டர்கள் குழுவாக வந்து யாத்திரையில் பங்கேற்றனர். யு.எஸ், பிரிட்டன், ஆஸ்திரேலியா, ஹாலந்து போன்ற வெளிநாடுகளிலிருந்தும் பயணிகள் வந்திருந்தனர்.

• போகும் பாதையில் எல்லாம் 'சாஸ்' என்கிற சீரகம் கலந்த மோர், பழச்சாறுகள், தண்ணீர் நிரப்பட்ட பிளாஸ்டிக் தம்ளர்கள், பாலிதீன் பைகளை நம்மவர்கள் பாதைகளில் வீசியெறிந்துவிட்டுப்போக, யாத்திரைக்கு வந்த வெளிநாட்டினர் அவற்றைப் பொறுப்பாக எடுத்து கோணிப்பைகளில் சேகரித்துச் சென்றனர்.

• தமிழ்நாட்டிலிருந்து யாத்திரையில் கலந்துகொண்டவர்களின் எண்ணிக்கை பத்துக்கும் குறைவாகவே இருந்தது. குமரி அனந்தன் தனது பிறந்தநாளை (மார்ச் 19) யாத்திரையின்போதே கொண்டாடினார்.

• 1930 யாத்திரையின்போது கலந்துகொண்டவர்களில் அதிக வயதானவர் காந்திஜி. வயது அறுபத்தொன்று. 2005 யாத்திரையில் கலந்துகொண்ட அதிக வயதானவர் ஓர் ஆஸ்திரேலியப் பெண்மணி. வயது எண்பத்தி நான்கு!

**- சுப்ர.பாலன்**

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்றுமில்லை

**வை**குண்டத்தை அடைவதற்கான ஒவ்வொரு படிக்கட்டுக்கும் ஒரு பெயர் உண்டு.

முதல் படிக்கட்டுக்கு விவேகம் என்று பெயர். இரண்டாவது படிக்கட்டுக்கு நிர்வேதம் என்று பெயர். மூன்றாவது விரக்தி, நான்கு பீதி, ஐந்து பிரணஹேது, ஆறு உக்ரமனம், ஏழு அர்ச்சிரார்தி மார்க்கம், எட்டு திவ்ய தேசப் பிராப்தி, ஒன்பதாவது பகவத் அனுபவம்.

இப்படிக் கிரமமாக இந்தப் படிக்கட்டுகள் அமைந்திருக்கின்றன. இந்தப் படிக்கட்டுகளை அக்கிரமமாக ஏற முடியாது; கிரமமாகத்தான் ஏற வேண்டும்.

வேதத்திலே மூலம், அதற்கப்புறம் பதம், அப்புறம் கிரமம், அப்புறம் ஜடை, அப்புறம் கனம் என்று சொல்லுவோம்.

பதம் சொன்ன பிற்பாடு கிரமம் சொல்கிறபோது, முதல் பதம் இரண்டாவது பதம் அடுத்தடுத்துச் சொல்வோம். அதன் பிறகு முதல் பதத்தை விட்டுவிட வேண்டும். இரண்டாவது பதம் - மூன்றாவது பதம் சேர்த்துச் சொல்ல வேண்டும். அப்புறம் இரண்டாவது பதத்தை விட்டுவிட வேண்டும் - மூன்றாவது, நான்காவது பதங்கள்... இப்படி மேல் பதத்தைப் பிடித்துப் பிடித்துச் சொல்வது உண்டு. இப்படிச் சொல்லிக் கொண்டு போவது கிரம பாராயணம். அந்த ரீதியிலே, படிப்படியாகச் சொல்லாமல், முதல் பதத்திலேயிருந்து மூன்றாவது பதத்துக்குப் போனோமானால் சந்தியும் சேராது, ஸ்வரமும் சேராது.

காஞ்சிபுரத்தில் தேவாதிராஜன் சன்னதியிலே உத்ஸவம் நடக்கிறபோது, கிரம பாராயணம் ரொம்பச் சிலாக்கியமாக இருக்கும். பகவான் ஏகாந்தமாக அதை அனுபவிப்பான். பல பேர் நின்று கொண்டு இப்படி கிரம பாராயணம் பண்ணுகிறபோது, ரொம்ப சிராவ்யமாக, நிசப்தமாக இருக்கும். சில சமயத்தில் ரதம் நிலைக்கு வந்து சேராது; சுற்றிலேயே இருக்கும். அப்போது ராத்திரியெல்லாம் இந்த ரதத்துக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு பாராயணம் பண்ணுவார்கள். நிசப்தமாக, ஊர் அடங்கியிருக்கிறபோது, இந்த வேத சப்தத்தைக் கிரம பாராயணமாகப் பண்ணுகிறபோது, கேட்கிறபோது ஏற்படக்கூடிய ஆனந்தம்..! அதைத்தான் சுவாமி தேசிகன் விவரிக்கிறார்.

'ஹே அத்திகிரி வரதா! நான் சபதம் பண்ணிச் சொல்கிறேன். இங்கே இருக்கிற வைபவத்தைப் பார்த்த பிற்பாடு, வைகுண்ட வாஸம்கூட எனக்கு வேண்டியதில்லை..." என்று கூறுகிறார்.

அவ்வளவு அனுபவம் அந்த திவ்ய க்ஷேத்திரத்தில், வேத பாராயண கோஷ்டியிலே நாம் அனுபவிக்கிறோம்.

டெல்லியில் ஒரு பெரிய சதஸ் நடந்தது. அப்போது பிரதிவாதி பயங்கரம் சுவாமி அத்யக்ஷராக இருந்து, ஒவ்வொருத்தரும் இரண்டு மணி இரண்டு மணி சம்ஸ்கிருதத்தில் பேசும்படி ஏற்பாடு. அந்த மாதிரி பெரிய வேத சம்மேளனம் நடந்து கொண்டிருந்தபோது, ராஜமுந்திரியிலிருந்து பெரிய கனபாடிகள் அங்கே வந்தார். அவருக்குப் பிரசித்தமான ஒரு பெயர் : 'தலக்குத் தல' கனபாடிகள் என்று! 'தலக்குத் தல' கனபாடிகள் என்றால், எல்லோரும் மேலே பிடித்து கனம் சொல்வதை, இவர் பின்னாலிருந்து சொல்லுவார்!

கனம் சொல்கிறபோது மேல் பதத்தைச் சொல்லுவதே கஷ்டம்... இவர் கீழ்ப் பதத்தை எடுத்துக் கொண்டு அதை ஒவ்வொன்றாகக் கூட்டி கூட்டிச் சொல்லுவார். இந்த மாதிரி வேதம் மொத்தத்துக்கும் அழகாக கனம் சொல்லுவார் அவர்.

பிரதிவாதி பயங்கரம் சுவாமி பேசுகிறபோது, "சங்கிரமமாக கனத்தைச் சொல்கிறவர்கள் நிறைய இருக்கிறார்கள். அக்கிரமமாக கனத்தைச் சொல்லக் கூடியவரும் இதோ இருக்கிறார், பாருங்கள்!" என்றார்.

இது கிரமம் இல்லையே! பின்னாலிருந்து சொல்லக்கூடிய ஒருத்தர் வந்

இருக்கிறாரே என்று அவரைப் பார்த்து எல்லோரும் கேட்டார்கள் : "நேரே சொல்வதே கஷ்டமாயிற்றே... தேவரீர் பின்னாலிருந்து சொல்கிறீரே, எப்படிச் சொல்கிறீர்...?" என்று கேட்டார்கள்.

அவர் பதில் சொன்னார் :

"இதை நானாகச் சொல்லவில்லை. நான் உபாஸிக்கும்படியான மூர்த்தி எனக்குக் கீழ்ப்பதத்தை எடுத்துக் கொடுக்கிறது; அதனால் சொல்கிறேன். நான் மனப்பாடம் பண்ணி, நெட்டுரு பண்ணிச் சொல்லக் கூடிய விஷயமில்லை..."

அப்படி விசேஷமாக அதற்கு அக்கிரம பாராயணம் என்று பெயர் வந்துவிட்டது அல்லவா!

நாம்கூட கிரமமாகப் படிக்கட்டு ஏறவேண்டுமேயொழிய, அக்கிரமமாக ஏறினால், கீழேதான் விழுவோம். இந்தப் படிக்கட்டு இருக்கிறது பாருங்கள். பகவானாலேயே அமைக்கப்பட்ட படிக்கட்டு இது. வேறு யாராலும் அமைக்கப்பட்ட படிக்கட்டு அல்ல! ஆதனால், அதிலே கிரமமாக, ஒவ்வொரு படிக்கட்டாக ஏறி நாம் மேலே போக வேண்டும்.

முதல் படிக்கட்டை ஏறுவதே ரொம்பக் கஷ்டம். அந்தப் படிக்கட்டுக்கு விவேகம் என்று பெயர். விவேகம் உள்ளவர்களைப் பார்ப்பது ரொம்ப கஷ்டம். அவிவேகம் உள்ளவர்களை நிறையப் பார்க்கலாம். விவேகம் உள்ளவர்களை, 'எங்கே எங்கே' என்று தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டும்.

பிறக்கிறபோதே விவேகம் உடையவனாக இருந்தவன் பரதன்தான். வால்மீகி ராமாயணத்தில், கவனித்துப் பார்த்தோமானால், பதினைந்தாவது ஸர்கமான அவதார ஸர்கத்திலே, 'ராமன் பிறந்தான்' என்று குறிப்பிடுகிறார். 'கௌசல்யா புத்ரனாக ராமன் பிறந்தான்'

ஆனால், பரதனுடைய பிறப்புக்கு ஓர் அடைமொழி கொடுக்கிறார் - ஒரு விசேஷம் - 'புஷ்யதி நட்சத்திரத்திலே, மீன லக்னத்திலே, பிறந்த பரதன், பிறக்கும்போதே விவேகமுடையவனாகப் பிறந்



தான்' என்கிறார்.

பரதனின் அம்மாவை ஒரு க்ஷணத்திலே கூனி மாற்றிவிட்டாள். ஆனால் பரதனை யாராலாவது மாற்ற முடிந்ததா...? இது தர்மம்; இது அதர்மம் என்று தெளிவான ஞானமுடையவன்தான் விவேகாத்மா. அப்படிப்பட்ட ஞானமுடையவன் பரதன். அவிவேகிகள் தர்மத்திலே அதர்ம புத்தியும், அதர்மத்திலே அதர்ம புத்தியும் ஏற்பட்டுத் தடுமாறுவார்கள். தர்ம புத்தி பூரணமாக இருக்க வேண்டும். அதர்மத்தை அறவே விட்டொழிக்க வேண்டும். இந்த தெளிந்த புத்தி யாருக்கு இருக்கிறதோ, அவர்தான் விவேகாத்மா.

**வி**வேகம் என்ற படிக்கட்டு முதலில் ஏற வேண்டும். இந்தப் படிக்கட்டை ஏறினால்தான் இரண்டாவது படிக்கட்டை ஏற முடியும். முதல் படிக்கட்டே நம்மை இரண்டாவது படிக்கட்டுக்கு ஏற்றி வைக்கும்...! அது என்ன படிக்கட்டு?

காலத்தை நினைத்து நினைத்து வருந்துதல். விவேகம் உடையவர்களுக் குத்தான் இந்த நிர்வேதம் என்பது வரும். சாமானியமாக எல்லோருக்கும் நிர்வேதம் என்பது வராது.

'போன ஜன்மத்திலே நான் சிம்மமாய்ப் பிறந்திருக்கக் கூடும். அப்போது எத்தனை பிராணி வர்க்கங்களை நான் கொன்றிருப்பேனோ? அதற்கெல்லாம் என்ன பிராயச்சித்தமோ!' என்று அந்த மாதிரி ஒரு ஜன்மாவைத் தன்மேலேயே ஏறிட்டுக் கொண்டு, அதற்காக வருத்தப்பட வேண்டும். இதுதான் நிர்வேதத்தில் ஏற்படக் கூடிய காரியம்.

திருமங்கையாழ்வார் சொல்கிறார் பாருங்கள் :

*தெரியேன் பாலகனாய் பல தீமைகள்*
*செய்துவிட்டேன்;*
*பெரியேன் ஆயினபின் பிறர்க்கே*
*உழைத்து ஏழை ஆனேன்*
*கரி சேர் பூம்பொழில் சூழ் கனமாமலை*
*வேங்கடவா*
*அரியே வந்தடைந்தேன் அடியேனை*
*ஆட் கொண்டருளே.*

சின்ன வயதிலே, அஞ்ஞானத்தினால் எத்தனையோ தப்புகள் பண்ணினேன். பெரியவனாக வளர்ந்திருக்கிறேனே... இப்போதுதான் என்ன வாழ்ந்தேன்! பிறர்க்கே உழைத்து ஏழையானேன். பிறர் என்றால், தம் மக்கள், மனைவி, வீடு, ... இவர்க்கே உழைத்து உழைத்து ஓடாய்த் தேய்ந்து,

பக்குவம் என்பதே உணராமல், இப்படியே என் வாழ்நாள் முழுவதும் போய் விட்டதே!'

ஸ்ரீமத் பாகவதத்திலே சுகபிரும்ம மஹரிஷி சொல்கிறார்.

தேய்ந்து தேய்ந்து மனிதன் எப்படி ஆகிறான் என்றால், சின்ன வயதிலே ஒரு பசுமாடு. அதற்குக் கொம்பிலே வர்ணம் தீட்டி, கொப்பு போட்டு, அழகாக அலங்காரம் பண்ணி 'கல் கல்' என்று போகிறது அது! வண்டி இழுக்கிறது; பொதி சுமக்கிறது, ஏர் உழுகிறது, கமலையை ஓட்டுகிறது. ஏகமாக உழைக்கிறது. உழைத்து உழைத்து, கடைசியிலே ஓடாகத் தேய்ந்து போகிறது. வயிறு ஒட்டிப் போயிருக்கிறது. எலும்பெல்லாம் தெரிகிறது. வண்டியை இழுக்க முடியவில்லை. படுத்துக் கிடக்கிறது அந்த மாடு! அடி அடி என்று அடிக்கிறான் அதன் யஜமானன். எழுந்திருக்க முடியவில்லை. 'இனிமேல் பிரயோஜனமில்லை' என்று தனியே கொண்டு கட்டி விடுகிறான் அதை! எப்போதாவது ஞாபகம் வந்தால், அதற்கு ஜலம் காட்டுவான்; ஒரு பிடி வைக்கோல் போடுவான். கத்திக் கொண்டேயிருக்கும் அந்த மாடு. கடைசியிலே அது விற்கத்தகாத இடத்தில் விற்கப்படும். அநியாயமாய் அடிபட்டு மாண்டு போகிறதே! ... இப்படி ஒரு மாட்டினுடைய கதை" என்றார் சுகபிரும்மம்.

இந்த மாதிரி தேய்ந்து ஒய்ந்து போகும்படியான நிலை, கடைசிக் காலத்திலே வருகிறதே. அதைப் பார்த்தாலாவது விவேகம் வரவேண்டாமா... இதையெல்லாம் நினைத்து நினைத்து யார் நிர்வேதப் படுவார்கள்?

'பிறர்க்கே உழைத்து ஏழையானேன்' என்று ஆழ்வார் பாடியிருக்கிறாரே... அதற்கு வியாக்யானம் என்ன...?

பிறர்க்கே என்றால், மனைவி - மக்களுக்கு என்று அர்த்தம் இல்லை. பிறர்க்கே என்றால், தானில்லாத இந்த சரீரத்துக்கே உழைத்து என்று அர்த்தம். ஆத்மாவுக்காக இல்லாமல், உடலுக்காக உழைப்பது. ஆத்மா நல்ல கதியை அடைய வேண்டும் என்று யோசனை பண்ணாமல், அழியக் கூடிய இந்த சரீரத்துக்கே உழைத்து, சரீரம் அழியக் கூடியது என்ற கவனமின்றி எவன் அந்திமக் காலம் வரையில் வாழ்ந்து கொண்டிருக்கிறானோ... அவன் அஞ்ஞானி இல்லையா!

(வளரும்)



# தேடுகிறான் கண்ணன்!

இங்கிருந்து வெளிநாடுகளுக்குப் பறந்து கொண்டிருப்பவர்களுக்கு மத்தியில், சிங்கப்பூரிலிருந்து சென்னைக்குப் பறந்து வந்திருக்கிறார் ஆனந்த கண்ணன். சன் மியூசிக்கின் கலகல காம்பியரான இந்தக் கூந்தலழகரின் சென்னை விஜயத்திற்கான காரணம்?

"தமிழ்நாட்டிலிருந்து பல நடன, நாடகக் கலைஞர்கள் தங்களது பரீட்சார்த்த முயற்சிகளை சிங்கப்பூரில் நிகழ்த்திக் காட்டுவார்கள். அதைப் பார்த்துத்தான் எனக்கும் தமிழக புராதனக் கலைகள் மீது ஆர்வம் வந்தது. ஏதாவது சாதிக்க வேண்டும் என்று புறப்பட்டு வந்துவிட்டேன். நா.முத்துசாமி அவர்களின் கூத்துப் பட்டறை நாடகமொன்றை மேடையேற்றி நடித்துள்ளேன். தப்பாட்டம், ஒயிலாட்டம் போன்ற கலைகளைக் கற்று, அதில் தேர்ச்சி பெற ஆர்வம். சரியாக எந்தக் கலையின் மீது என் ஜீவன் பரிதவிக்கிறது என்பதை கண்டுபிடிக்கும் வரை என் தேடல் தொடர்ந்து கொண்டேயிருக்கும்" என்று கூறும் ஆனந்த கண்ணன், சிங்கப்பூர் தமிழ்க் குடும்பத்தைச் சேர்ந்தவர். எலக்ட்ரிகல் & எலக்ட்ரானிக்ஸில் டிகிரி முடித்திருக்கிறார்.

"நான் தமிழ் பேசுவது அனைவருக்கும் ஆச்சர்யமாக இருக்கிறது. தாய்மொழியில் தேர்ச்சி பெறாமல் சிங்கப்பூரில் எந்த யுனிவர்சிட்டிக்குள்ளும் நுழைய முடியாது. சன் மியூசிக்கில் நான் காம்பியர் பண்ணும்பொழுது நல்ல தமிழில் பேசுவதுதான் பலருக்கும் பிடித்திருக்கிறது" என்றவரிடம் குடும்பத்தைப் பற்றிக் கேட்டோம். என் தந்தை வசந்த கண்ணன், தம்பி கோபி கண்ணன், தங்கை நித்திய கன்னி என அனைவருமே என்னை உள்ளங்கையில் வைத்துத் தாங்குவார்கள். இதனால் மாதக் கடைசியில் பணப் பிரச்னைகள் என்னை பாதிப்பதில்லை."

**அடுத்து சினிமாவா?**

"தமிழ் சினிமா வாய்ப்புகள் வந்தது. என்ன கதை, என் கேரக்டர் என்ன என்று கேட்டதற்கே ஏதோ கெட்டவார்த்தை பேசியதாக நினைக்கிறார்கள். அர்த்தமுள்ள கேரக்டர்கள்... சினிமா, டீவி எதில் வந்தாலும் சம்மதம் தான்."

**தமிழ்நாட்டுப் பெண்கள்... சிங்கப்பூர் பெண்கள்... என்ன வேறுபாடு?**

"சிங்கப்பூர் தமிழ்ப் பெண்கள் சேலை கட்ட மிகவும் ஆசைப்படுவார்கள். இங்கு பெண்கள் மாடர்ன் உடைகளைத்தான் அதிகம் விரும்புகிறார்கள். நிறைய பெண்கள் என் நீளமான முடியை வெட்டச் சொல்கிறார்கள். என் ஹேர் ஸ்டைலே வெளியிடங்களில் என்னை அடையாளப்படுத்தி விடுவதால், எங்கு சென்றாலும் மங்கி குல்லாவை போட்டுக் கொண்டுதான் செல்வேன்."

**சன் மியூசிக்கில் உங்களுக்குப் பிடித்த காம்பியர் யார்?**

"பெண்கள் யாரையாவது சொல்வேன் என்றுதானே எதிர்பார்க்கிறீர்கள்... அதுதான் கிடையாது... எனக்குப் பிடிச்சது ப்ரஜன்தான்!"

- செந்தில்

# நடக்குமென்பார் நடக்கும்!



**27.4.2005 முதல் 3.5.2005 வரை**

**மேஷம்:** மகிழ்ச்சியான வாரம். தனம், வாக்கு, கல்வி வளம் மேன்மை கிட்டும். திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணம் நடக்கும். நண்பர், உறவினர்கள் வழியில் ஆதாயம் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்குப் பணி மாற்றம் ஏற்படும். வியாபாரம் செய்பவர்களுக்கு முன்னேற்றம் கிட்டும். கலைஞர்களுக்கு வெற்றி ஏற்படும். மாணவ/ மாணவியருக்கு கல்வியில் நற்பயனைக் கொடுக்கும்.

**ரிஷபம்:** பேரும் புகழும் சேரும் வாரம். பண வரவு ஏற்படும். நீண்ட தூரத்தில் இருந்து நல்ல செய்தி வரும். திருமணம் ஆகாதவர்களுக்கு உடன் செட்டிலாகும். மாணவ/மாணவியர் நற்பலனை எதிர்பார்க்கலாம். தாய்மார்கள் உடல்நிலையில் கவனம் தேவை. நெருங்கிய உறவினர் / நண்பர் இடம் மாறிச் செல்வார்கள். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரிகளுக்குப் புதிய தொழில் ஒப்பந்தம் கையெழுத்து ஆகும். கலைஞர்கள் முன்னேற்றம் காண்பார்கள்.

**மிதுனம்:** இந்த வாரம் மேன்மையான வாரம். உத்தியோகஸ்தர்கள் பணிமாற்றம் பெறுவார்கள். சிலருக்குத் தன வரவில் குறைவு இருக்காது. நண்பர் மூலம் நற்பலன் நடக்கும். கலைஞர்கள் முன்னேற்றம் காண்பார்கள். பெண்கள் ஆபரணப் பொருள் வாங்குவார்கள். வியாபாரிகளுக்குப் பண வரவு கூடும்.

**கடகம்:** தெய்வ பலம் நிறைய இருக்கிறது. மனக் குழப்பம் நீங்கும். சிலருக்கு சொத்து வாங்கும் சூழ்நிலை ஏற்படும். யாருக்கும் ஜாமீன் போடுவதைத் தவிர்க்கவும். உறவினர்களால் சங்கடம் ஏற்படலாம். கணவன்-மனைவி உறவு சீர்படும். சொந்தத் தொழில் புரிபவர்கள் நற்பலனை அடைவார்கள். உத்தியோகஸ்தர்களுக்கு வேலை மாற்றம் காத்திருக்கிறது. குரு, சனி வழிபாடு அவசியம்.

**சிம்மம்:** பொன்னான வாரம். புதிய ஒப்பந்தம், காண்ட்ராக்ட்டில் கையெழுத்து இட நேரிடும். கல்வி மேன்மை பெறும். பெண்கள் வாக்குவாதம் செய்ய வேண்டாம். பேச்சில் கவனம் அவசியம். மறதி ஏற்படும். திருமணம் ஆகாத ஆண், பெண்களுக்குத் திருமணம் நடக்கும். குடும்

தஞ்சை பரத்வாஜ்

பத்தில் சந்தோஷமான காரியம் நடக்கும். உடல் நிலையில் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது.

**கன்னி:** குழப்பம் நீடிக்கும். கணவன்-மனைவி விட்டுக் கொடுத்து ஒற்றுமையுடன் செயல்படுவது நல்லது. சிலருக்கு வெகுதூரம் செல்லும்படி இருக்கும். அவசரப்பட்டு வேலை மாற வேண்டாம். தொழில் துறையில் போட்டா போட்டி

பெறுவார்கள். கலைஞர்களுக்குப் பொன்னான நேரம். பெண்களுக்கு ஆடை அலங்காரப் பொருள் சேரும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும்.

**விருச்சிகம்:** சுமாரான வாரம். சிலருக்கு இடப்பெயர்ச்சி ஏற்படும். புதிய முயற்சிகள் கைகூடும். தாயாரின் உடல் நலத்தில் கவனம் அவசியம். நண்பர்களுடன் கருத்து வேற்றுமை வரலாம்.

# நல்லது நடக்குமா?

**❖ என் மகள் ரூபாவதிக்கு நான்கு வருடங்களாக முயன்றும் திருமணம் கைகூடவில்லை. எப்போது திருமணம் நடக்கும்?**

**- வி. ரகுபதி, கிறிஸ்டியா நகரம்**

ரூபாவதிக்கு 1.9.2005க்கு மேல் மேற்கு/தெற்கு திசையிலிருந்து வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை செய்யும் வரன் அமையும்.

**❖ என் மகன் பழைய வேலையை விட்டு புதிய வேலையில் சேர்ந்திருக்கிறான். அவன் வருங்காலம் எப்படியிருக்கும்?**

**- கே.ஆர்.சுரேந்திரன், விஜயவாடா**

சனி தசையில் சுக்கிர புத்தி காரணமாக வேலை மாற்றம் நன்மைக்காகவே ஏற்பட்டது. அது நற்பலனைக் கொடுக்கும். புதிய வேலை இன்னும் மேன்மையை அளிக்கும்.

**❖ வேறு ஜாதிப் பையனுடன் குடும்பம் நடத்தும் என் பெண்ணின் ஜாதகம் அனுப்பியிருக்கிறேன். இரண்டு பெண் குழந்தைகள் உண்டு. ஆண் குழந்தை பிறக்குமா? எதிர்காலம் எப்படி?**

**- கே.வி.கிருஷ்ணய்யர்,**
**தஞ்சாவூர் - 4**

உங்கள் மகளுக்கு முப்பது வயதிலிருந்து நல்ல எதிர்காலம் ஆரம்பமாகிறது. அதுவரை சிரமமாகத்தானிருக்கும். ஆண் குழந்தை பிறக்க வாய்ப்பில்லை.



**❖ என் மகனது திருமணம் தாமதமாகிக் கொண்டே வருகிறது. எப்போது திருமணம் நடக்கும்? பரிகாரம் என்ன?**

**- என். ரங்கநாதன்,**
**சென்னை -94**

உங்கள் மகனுக்கு 2.7.05க்குப் பிறகு, 36 வயதில் திருமணம் நடக்கும். பிறந்த ஊரிலிருந்து பத்து மைல் சுற்றளவில் வடக்கு பார்த்த வீட்டிலிருக்கும் பெண் அமையும். பரிகாரம் தேவையில்லை.

**❖ என் மகளின் ஜாதகம் அனுப்பியிருக்கிறேன். அவளுக்குப் படிப்பு சுமார்தான். செவ்வாய் தோஷம் உள்ளதா?**

இருக்கும். உடன் பிறப்பால் நன்மை இல்லை. தொழில் செய்பவர்கள் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. வாகனத்தில் கவனமுடன் செல்வது நல்லது.

**துலாம்:** நல்ல முன்னேற்றமான வாரம். பண வரவுகள் பாக்கெட்டை நிரப்பும். வாக்குவன்மை நன்றாக இருக்கும். நண்பர்/உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். மாணவ/மாணவியர் வெற்றி

தொழில் செய்பவர்கள் எச்சரிக்கையுடன் நடப்பது நல்லது. பண வரவுக்கு குறைவு இருக்காது. திருமணம் நடக்கும். உத்தியோகத்தில் நற்பலன் ஏற்படும். பெண்களின் எண்ணங்கள் நிறைவேறும்.

**தனுசு:** எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. மாணவர்கள் படிப்பில் அக்கறை செலுத்த வேண்டும். குடும்பத் தலைவிகள் கணவருடன் வாக்கு

வாதத்தை தவிர்க்கவும். பொருளாதாரத்தில் மந்தமான போக்கு ஏற்படும். தொழில் செய்பவர்கள் நிதானத்துடன் செயல்பட வேண்டும். வேலைப் பளு ஜாஸ்தி இருக்கும். உடல்நிலையில் கவனம் தேவை.

**மகரம்:** எதிலும் வெற்றிதான். திடீர் தனவரவுகள் ஏற்படும். தெய்வ தரிசனம் ஏற்படும். குடும்பத்தில் நல்ல காரியம் நடக்கும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. சிலருக்கு இடமாற்றம் காத்திருக்கிறது. கணவன்-மனைவி உறவில் விட்டுக்கொடுத்து போவது நல்லது. பொது காரியங்களில் தலையிடும்போது எச்சரிக்கையுடன் செயல்படவும். யாருக்கும் ஜாமின் போட வேண்டாம். தடைப்பட்டு வந்த திருமணம் கைகூடும்.



## பரத்வாஜ் பதில்கள்



**கல்யாணம் எப்போது ஆகும்?**

**- எஸ்.சி.ஜெயலக்ஷ்மி, சென்னை - 44**

உங்கள் பெண்ணுக்கு 21 வயதில் திருமணம் ஆகும். வேலைவாய்ப்பு இல்லை. செவ்வாய் தோஷம் கிடையாது.

**❖ எனக்கு சில லட்சங்கள் கடன் உள்ளது. என் கடன் தீர்ந்து நல்லது எப்போது நடக்கும்?**

**- பி.எம். எல்.ஐ.ஸி. ஏஜெண்ட், குருவரெட்டியூர்**

உங்கள் தொழிலில் தற்போது மந்த நிலை இருக்கும். 45 வயது 4 மாதம் 12 நாள் கடந்த பிறகு கடன் அறவே தீரும். கவலையே வேண்டாம். சஷ்டி கவசம் படித்து வருவது நல்லது.

**❖ என் ஒரே மகனுக்கு தினம் தினம் அலைந்தும் வேலை கிடைக்கவில்லை; திருமணம் ஆகவில்லை. எப்போது நல்ல காலம் பிறக்கும்?**

**- என்.கே. ஈஸ்வரி, பெங்களூர் - 10**

இப்போதைக்குத் திருமணமில்லை. திருப்பதி ஏழுமலையானை பிரார்த்தித்துக் கொண்டே வந்தால் உங்கள் பிரச்னை தீரும்.

**❖ என் ஒரே மகளின் திருமணம் தடைப்பட்டுக் கொண்டே போகிறது. எப்போது கல்யாணம் நடக்கும்? தோஷம் எதுவும் உள்ளதா?**

**- அ. ராகவன், நாரணமங்கலம்**

ஜாதகப்படி 2005க்குள் திருமணம் நடக்கும். நான்கு இடம் பார்த்துப் பேசினால் அதில் மூன்று தட்டிச் செல்லும். நான்காவது அமையும். படித்த, பண்பான, நல்ல பையனாக அமையும். தோஷமெதுவும் இல்லை.

**❖ என் மகள் B.Sc. (F.T.) முதலாண்டு படிக்கிறாள். இதில் மேற்படிப்பு படிக்கலாமா? திருமணம் எப்போது?**

**- சி.மல்லிகா, புதுக்கோட்டை**

உங்கள் மகளுக்கு உயர்ந்த கல்வி வளம் இருக்கிறது. மேலே படிக்கலாம். 22 வயதில் திருமணம், மகள் பிறந்த அதே ஊரில் பிறந்த வரன் அமைந்து, நல்ல இல்லற வாழ்வு கிட்டும்.

கும். தேக நலம் சீர்படும். வாக்கு வன்மை நன்கு இருக்கும். உறவினர்கள் வருகையில் நல்லது நடக்கும். தொழிலில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் நல்ல மாறுதல் கிடைக்கும்.

**கும்பம்:** காரிய தாமதம் ஆனாலும் எதிலும் வெற்றிக் கொடியைப் பிடிப்பீர்கள். குடும்பத்துல நல்ல நிகழ்ச்சிகள் ஏற்படும். குழந்தைகள் பற்றின கவலை நீங்

**மீனம்:** மலை போல் வரும் கஷ்டம் பனி போல் விலகும். தனவரவுகள் ஏற்படும். வாக்கில் நிதானம் அவசியம். குடும்பத்தில் சுபகாரியம் நடக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலை மாற்றம் இருக்கிறது. கணவர் வழியில் நல்ல திருப்பம் ஏற்படும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. உடல்நலனில் கவனம் தேவை. ●

# "காதல் இன்னும் வரல!"

தென்றலில் 'அடிதோழி', பார்த்திபன் கனவில் 'பக்பக்... பக்பக்', தற்போது கனா கண்டேனில் 'காலை அரும்பி' இந்த மூன்று பாடல்களிலும் வித்யாசாகர் இசையில் ஒரு வித்தியாசமான பஞ்சமிட்டாய்க் குரலை உணர்ந்திருப்பீர்கள். அந்தக் குரலழகி, கல்யாணி. இவரது பூர்வீகம் கேரளா என்றாலும், மலையாள வாடையின்றிப் பாடுகிறார். இதோ உங்களுக்காக இனி அவரே இசைக்கிறார். கேளுங்கள்!

''என்னோட அப்பா ஆர்மியில இருக்கிறதால, இந்தியாவில பல ஊர்கள்ல இருந்திருக்கேன். ஆர்மி ஃபங்ஷன்ல பாடினேன். பதிமூணு வயசுல மத்திய பிரதேசத்து ஊர் ஒண்ணுல 'கஜல்' கச்சேரி பண்ணினேன். அப்புறம் ஹைதராபாத்ல 'கைராளி' டீ.வி.யில ஒரு நிகழ்ச்சியில பாடினேன். திருவனந்தபுரம், பெங்களூர், சென்னைனு நிறை இடங்கள்ல கைராளிக்காக மேடை நிகழ்ச்சிகள் பண்ணினேன். பிறகு ஜீ டீ.வி.யில 'சரிகமப...' நிகழ்ச்சியில கலந்துக்கிட்டேன். படிப்படியா பக்தி ஆல்பங்கள், தமிழ், மலையாள சினிமான்னு என்னோட எல்லைகள் விரிஞ்சது. வித்யாசாகர் சார் இசையில நான் பாடின 'அடித்தோழி' அருமையான மெலடி. உயிரையே உருக்கிடும். இந்தப் பாட்டு அடிக்கடி டீ.வியில வந்ததால, திரைத் துறையிலும் எனக்குன்னு ஒரு அடையாளம் உருவாச்சு. நான் பாடின 'கனா கண்டேன்' படப் பாடலில் வைரமுத்து சார் அருமையான காதல் வரிகளை சேர்த்திருக்கார்'' என்று மூச்சு விடாமல் பேசியவரிடம் 'பாட மட்டும்தான் தெரியுமா?' என்றோம்.

''என்ன, இப்படி கேட்டுட்டீங்க.. எனக்கு டான்ஸ் ஆடவும் தெரியும். ஹிந்தி மெலடிஸ், குறிப்பா ஆஷாஜி, லதாஜி, முகமத் ரஃபி பாட்டுக்கன்னா உயிரைக் கொடுப்பேன். கீபோர்டு, பியானோ வாசிக்கப் பிடிக்கும்.

படிப்புலயும் நான் கெட்டி. எத்திராஜ்ல பி.ஏ. பொருளாதாரம் முதல் வருடம் படிக்கிறேன். பொருளாதாரம் 'Heart of the nation', இசை 'art of the passion' இரண்டுமே எனக்கு பிடிக்கும். அதுவும் கலாம், மன்மோகன், ப. சிதம்பரம்னு பொருளாதார மேதைகள் ஆட்சியில் இருக்காங்க. சந்தோஷமா இருக்கு!'' என்றவரிடம் நமது வழக்கமான கேள்வியை எடுத்து விட்டோம்.

'பாடியதெல்லாம் காதல் பாட்டுக்கள். காதல் அனுபவம்?'

''இன்னும் வரல. வந்தப்புறம் எஸ்.எம்.எஸ். அனுப்பறேன்.

'சரி, பொருளாதாரத்துக்கும் இசைக்கும் என்ன சம்பந்தம்?''

''என்ன சம்பந்தம்? தெரியலையே...''

''கல்யாணி!''

''ஆஹா... ஓகே... டாடா... பைபை!''

- நதி





"ம்ஹூம்... உங்க போதைக்கு, நாங்க ஊறுகாய்" என்று 'காதல்' படத்தில் பயங்கர க்ளாப்ஸ் வாங்கிய டயலாக்கை உச்சரித்த ஒரே காரணத்திற்காக அனைவரிடமும் சுலபமாக அறிமுகமாகிவிட்டார், அப்படத்தில் சந்தியாவின் தோழியாக நடித்த சரண்யா. வெகு விரைவில் தமிழ் சினிமாவின் இளவயது ஹீரோயின்.

"குழந்தை நட்சத்திரமாக சில படங்களில் நடிச்சிருக்கேன். ஒரு நாள் நான் உட்லண்ஸ் தியேட்டர்ல படம் பார்க்கப் போனபோது ஒளிப்பதிவாளர் மில்டன் கண்ணில் மாட்ட, அவர் கொடுத்த அட்வைஸ்ல 'காதல்' ஹீரோயின் சான்ஸுக்காக ஷங்கர் சார் ஆபீஸுக்குப் போனேன். ஆனால் நான் ரொம்பச் சின்னப் பொண்ணா தெரியறேன்னு சந்தியாவை செலக்ட் பண்ணிட்டாங்க.

# "காதல், ரஜினி மாதிரி!"

பெரிய பேனராச்சேன்னு நான் ஃப்ரெண்டா நடிக்க ஒத்துக்கிட்டேன்.

ஆனா, 'காதல்' இப்படி சூப்பர் ஹிட்டாகும்னு நினைக்கவேயில்லைங்க. ஷூட்டிங் போனா, அங்கு லைட்ஸ் எதுவுமே இல்லை. நேச்சுரல் லைட்டிங்கில் ஒளிப்பதிவு செய்ததால் சூழல் ரொம்ப வித்தியாசமா இருந்தது. சந்தியா முதன்முறையா கேமராவ பார்க்கறதால என்கிட்ட டவுட்ஸ் கேட்பாங்க. ஒவ்வொண்ணும் பத்து டேக்ஸ் மேல போகும். டைரக்டர் நல்லா திட்ட, நாங்க ஓரமா போய் அழுவோம். சொன்னபடி நடிக்காததால என்னையும் சந்தியாவையும் டைரக்டர் பாலாஜி சக்திவேல், 'அபிநய சுந்தரிகள்'னுதான் கூப்பிடுவாரு. பரத் பந்தா இல்லாத ஆர்ட்டிஸ்ட். அவருக்கு ஜோடியா நடிக்க எனக்கு ரொம்ப ஆர்வம் அதிகம்."

அந்தக் கேள்வியை கேட்கவில்லை என்றால் நமக்குத்தான் மண்டை வெடித்துவிடுமே... கேட்டோம்...

'காதல் பற்றி ஏதாவது தெரியுமா?'

"காதல் ரஜினி மாதிரிங்க. எப்போ வரும், எப்படி வரும்னு சொல்லவே முடியாது. ஆனா வரவேண்டிய நேரத்துல கரெக்டா வந்துடும். சரியா!"

- செந்தில்

படம் : ஸ்ரீஹரி

ஓவியம் என்றாலே கேன்வாஸ் மற்றும் வண்ணங்கள் தோய்த்த தூரிகைகள்தான் நம் நினைவிற்கு வரும். அதிலும், நவீன ஓவியங்கள் என்றால், புரிபடாத கோடுகளும் வண்ணக் கலவைகளும் நம்மை மிரளவைக்கும். சீனிவாசனின் ஓவியங்கள் இவற்றிலிருந்து பெரிதும் மாறுபட்டவை. எது மாதிரியும் இல்லாமல் புது மாதிரியாக இருக்கின்றன இவரது படைப்புகள். நமக்கு இதுவரை பரிச்சயமாகியுள்ள ஓவிய முறைகளின் அடுத்த கட்ட பரிணாம வளர்ச்சியே இவரது டிஜிட்டல் ஓவியங்கள். கம்ப்யூட்டர்தான் இவருக்கு கேன்வாஸ்... மென்பொருட்கள்தான் இவரது தூரிகை.

ஓவியத்தில் இவருக்கு கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடகால ஆழ்ந்த ஈடுபாடு, அனுபவம் இருக்கிறது.

'ஓவியங்கள் தெரியும், நவீன ஓவியங்கள் தெரியும், அதென்ன நான்-லீனியர் வகையரா?' என்று எல்லோரும் திகைத்திருந்த காலகட்டத்திலேயே இவர் நான்-லீனியர் பிரிவில் வெகு தூரத்திற்கு முன்னேறிவிட்டிருந்தார். கணிப்பொறியின் இயக்கங்கள் முழுவதும் அத்துப்படி. டிஜிட்டல் புகைப்படக் கலையை கற்றுத்தேர்ந்திருக்கிறார். டிஜிட்டல் ஓவியக் கண்காட்சிகளை நடத்தியிருக்கிறார். வெங்கட்சாமிநாதன் உட்பட பலரால் இவரது படைப்புகள் பாராட்டப்பட்டிருக்கின்றன.

"நான் எதை நினைத்து ஓவியம் தீட்டுகிறேனோ அதை அப்படியே எல்லோரும் புரிந்துகொள்ள வேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஒவ்வொரு முறை அதைப் பார்க்கும்பொழுதும் புதிது புதிதான எண்ணங்கள் தோன்றிக்கொண்டே இருக்க வேண்டும்" என்கிறார் சீனிவாசன்.

இது உண்மைதான் என்பதை இவரது ஓவியங்களைப் பார்க்கும்பொழுது தெரிந்துகொள்ளலாம். தொழில்நுட்பம் வேறு, ஓவியம் போன்ற கலைகள் வேறு என்று இனி நினைக்க வாய்ப்பில்லை. இரண்டையும் அருகருகே கொண்டு சென்று இவர் நடத்திய டிஜிட்டல் புரட்சி, இந்த எண்ணத்தைச் சிதறடித்து விட்டது.

- இன்பா

## டிஜிட்டல் புரட்சி!



• சீனிவாசன்

### தயாநிதி முன்னேற்ற கழகம்!

காஞ்சிபுரம் - கும்மிடிப்பூண்டி இடைத் தேர்தல் குறித்துப் பேசுவதற்காக சென்ற வாரம் தி.மு.க. கூட்டணிக் கட்சிகளின் கூட்டம் அண்ணா அறிவாலயத்தில் நடைபெற்றது. பரபரப்பான சூழலில் நிகழ்ந்த இக்கூட்டத்தில் நம் கழுகுக் கண்கள் ஊடுருவியபோது...

• மற்ற கூட்டணிக் கட்சித் தலைவர்கள் தனியாக வந்தபோதும், வைகோ மட்டும் தாயகத்தில் திருவள்ளூர், காஞ்சிபுரம் மாவட்ட, ஒன்றிய செயலாளர்களுடன் டிஸ்கஷனை முடித்துவிட்டு, தொண்டர்கள் புடை சூழ வந்திருந்தார்.

# கல்கி கல்கி

* மாநகராட்சி தேர்தல் வன்முறையைக் கண்டித்து சாலை மறியலில் ஈடுபட்ட ஸ்டாலின், ஆற்காடு வீராசாமி உள்ளிட்டோர் கைது செய்யப்பட்டதாக வந்த தகவல், அறிவாலயத்தில் தொண்டர்களின் பி.பியை எகிற வைத்துக் கொண்டிருக்க, கூட்டணித் தலைவர்களுக்கோ பஜ்ஜி, சட்னி, சாம்பார் பரிமாறப்பட்டுக் கொண்டிருந்தது.

* 'இந்தத் தேர்தலில் தி.மு.க. வேட்பாளராக யார் நின்றாலும் கடுமையாக செலவு செய்ய வேண்டியிருக்கும். அந்த செலவை ஈடுகட்ட அடுத்த பொதுத் தேர்தலிலும் அவருக்கே வாய்ப்பு தர வேண்டி வரும். அதனால் அந்த தி.மு.க.காரருக்கு இரட்டைச் செலவு. அதே சமயம் இப்போது இந்தம்மா ஆட்சி நடக்கறதால வெற்றி வாய்ப்பும் கம்மிதான். இதையெல்லாம் கலைஞர் யோசிச்சிருந்தா நிச்சயம் கூட்டணிக் கட்சிக்கு விட்டுக் கொடுத்திருப்பார்'' என்றார் திருவள்ளூர் மாவட்ட தி.மு.க. நிர்வாகி, சக உறுப்பினரிடம்.



* தயாநிதி

* அண்ணா அறிவாலய முகப்பில் இருக்கும் அந்த சர்ச்சைக்குரிய பூங்கா நிழலில் அமர்ந்து சீரியஸாக விவாதித்துக் கொண்டிருந்தனர் தி.மு.க. தொண்டர்கள். அப்போது தயாநிதி மாறன் புகைப்படம் மீடியாவிலும் விளம்பரங்களிலும் மின்னுவது குறித்துப் பேச்சு வந்தது. "DMKங்கறதை நான்கூட முன்னால 'தளபதி முன்னேற்றக் கழகம்'னு சொல்லி சந்தோஷப்படுவேன்டா. ஆனா இப்போ தயாநிதி முன்னேற்றக் கழகமா மாறிடிச்சிப்பா'' என்றார் ஒரு தொண்டர், சுற்றும் முற்றும் பார்த்தபடி.

* கலை

# காகித ஆலயம்!




கல்கி தமிழ் இலக்கியத்தின் தலைப்பாகை. அரசியல் - சினிமா - கவிதை இவற்றின் திரிவேணி சங்கமம்! தமிழன் தன் பாரம்பரியத்தை சரி பார்த்துக் கொள்ளும் நிலைக் கண்ணாடி! ஆன்றோர்களின் கண்களில் இது மூக்குக் கண்ணாடி! கல்கி ஒரு காகித ஆலயம்! இல்லங்களின் பெருமை! எழுத்தாராதனை! இதில் நானும் ஒரு தொடர் எழுதியுள்ளேன் என்பது எனக்கான வரலாற்றுப் பதிவு!

- பா. விஜய்
திரைப்பாடலாசிரியர்

படம்: ஸ்ரீஹரி

# "உலக ஆஸ்துமா விழிப்புணர்வு தினம்"





மருத்துவமும் மனித நேயமும் இணைந்த நிகழ்ச்சி
மக்களுக்குத் தேவை ஆஸ்துமா விழிப்புணர்ச்சி
ஆறாவது வருடமாக மாறாது மலரும் எழுச்சி !

நாள் : 1.5.2005
நேரம் : மாலை 5.30 மணி முதல் 9.00 மணி வரை,
இடம் : **பாரதிய வித்யாபவன்**
கிழக்கு மாட வீதி - மைலாப்பூர் - சென்னை அருள்மிகு கபாலீஸ்வரர் கோயில் அருகில்

## நிகழ்ச்சி நிரல்







**5 30 :** கடவுள் வாழ்த்து

வரவேற்புரை
''நம்பிக்கை வளர்ப்போம் ; மூட நம்பிக்கைகளை தகர்ப்போம்
- ஆஸ்துமா பற்றிய அறிவுபூர்வமான அணுகுமுறை -
சுவையான தெளிவான விளக்கங்கள்

அளிப்பவர் : **டாக்டர் R. ஸ்ரீதரன் MD., F.A.A.P., A.B., (U.S.A)**
ஆஸ்துமா - அலர்ஜி சிறப்பு மருத்துவர்

**6.15 :** ''நல்லதோர் வீணை செய்தே''

கார்ட்டூன் புயல் - பத்திரிக்கையாளர் -பன்முக வித்தகர்
**ஹாய் மதன்** அளிக்கும் - சிறப்பு சொற்பொழிவு

**7.00 :** மழலைச் செல்வங்களின் மருட்சி தரும் ஆஸ்துமா
அனுபவங்கள்

**7.15 :** 'மனிதமே புனிதம்'
கலகலப்பு நாயகன் **திரு. பார்த்திபன்** அளிக்கும்
மனதை வருடும் சொற்பொழிவு

**8.00 :** ''நீ கேள்வி என்றால் நான் பதிலாவேன்'' ஆஸ்துமா - அலர்ஜி
பற்றிய அடிப்படையான கேள்விகளும் - ஆணித்தரமான பதில்களும்
பொதுமக்களின் கேள்விகளுக்கு பதில் அளிப்பவர் :
**டாக்டர் ஸ்ரீதரன்**

**8.30 :** நன்றி உரையில் மாயாஜாலம்!
**டாக்டர் வி. சந்திரசேகர்**, தலைவர், பென்ட்டா மீடியா
தேசிய கீதம்

**8.45 :** நிறைவு உரை
அன்பு தொகுப்பாளர் : **திரு. அப்துல் ஹமீத்.**

அனைவரும் வருக !

ஆஸ்துமாவை வெல்க !

அனுமதி இலவசம்






**அறிமுகம் புதிய விரிவாக்கம் செய்யப்பட்ட போத்தீஸ் பேலஸ்...**

போத்தி மூப்பனாரின் லட்சியமாக உருவாகி 90 ஆண்டுகளைக் கடந்த பட்டுப்பாரம்பரிய நிறுவனம் போத்தீஸ். ராஜ பரம்பரையை சேர்ந்தவர்களுக்கென நெய்த அந்த நெசவாளியின் திறமை நான்கு தலைமுறைகளைக் கடந்து இன்றும் புன்னகையுடன் தொடர்கிறது.

வாடிக்கையாளர்களை ராஜ பரம்பரையினரை போல் கௌரவிப்பதன் மூலம் இன்றும் அவர்களுடைய பெருமைக்குரிய பாரம்பரியம் தொடர்கிறது.

இன்றைய ராஜா ராணிகளுக்கு போத்தீஸின் சமர்ப்பணம், புதிய விரிவாக்கம் செய்யப்பட்ட போத்தீஸ் பேலஸ்.

**POTHYS**

Aalayam of Silks

Panagal Park, T. Nagar, Chennai - 600 017 Ph: 24310901 www.pothys.com e-mail: info@pothys.com